ஸ்ரீபுரம் என்னும்

# கமலாலய க்ஷேத்திர தத்துவம்.



ஆசிரியர்

ந. சுப்பிரமணிய அய்யர்.

ஸ்ரீ கமலாலயச் சிறப்பு வெளியீடு-2

# ஸ்ரீகமலாலய க்ஷேத்திரதத்துவம்

இது

பிக்ஷாண்டார் கோவில்-பண்ணையாளர்

**திரு. கோ. இராஜகோபாலப் பிள்ளையவர்களின்**

விருப்பத்திற்கிணங்க

சென்னை

ஸ்ரீ குஹாநந்த மண்டலி ஸ்தாபகர்

பிரஹ்மஸ்ரீ - அருட்கவி - அபிநவபாஸ்கர

**ந. சுப்பிரமணிய அய்யரவர்களால்**

இயற்றப்பட்டது.



1951

[ விலை ரூ. 2

உ

சிவமயம்

# புனைந்துரை

வரலாறுகள் அனைத்தும் உண்மையை யுணர்த்தவே உரைக்கப் பெறுவன. வரலாறுகள் சர்க்கரைப்பாகு. தத்துவங்கள் அந்தப்பாகு பூசிய, உயிராக்கந்தரும் மருந்துகள். வரலாறுகள் எல்லாவற்றிலுமே இந்தக்கண்ணோடு தத்துவங்களைக் காண முயலுவதே அறிஞன் மேற்கொள்ளும் அலுவல். இவ்வண்ணம் நமது இந்திய நாட்டில் பன்னெடுங்காலமாகத் தத்துவ சாஸ்திரத் தேன்பாகில் ஊறிவிளைந்த உணர்ச்சியோடு கூடிய சமுதாயம் தழைத்து வருவதால், மக்கள் அனைவரும் உய்ய மகரிஷிகள் தத்துவ சாஸ்திரக் கருத்துக்களைப் புராண வரலாறுகளாக அமைத்து வைத்தார்கள். மகரிஷிகளுடைய தீர்க்கதரிசனத்தன்மையும், அறிவு விசேடமும் இந்த வரலாறுகளின் ஒவ்வொரு பகுதியிலும் பிரதி பலிக்கக்காணலாம்.

தலபுராணங்கள் ஒரே மாதிரியான சரித்திரத்தை விளக்குவனவாக இருந்தாலும் அவற்றில் மறைந்து நிற்கும் மகிமைகள் பல.

பிருதிவித்தலம் திருவாரூர் என்று கமலாலய மாகாத்மியம் கூறுகின்றது; காஞ்சிபுரம் என்று ஸ்ரீகாஞ்சீ மாகாத்மியம் கூறுகிறது. இரண்டிலும் உண்மையுண்டு. இவைகள் வெறும் அபிமான வாசகங்கள் அல்ல. இரண்டிடத்திலும் எல்லாவற்றையும் தாங்கிக் காத்தருளும் ஆதிசக்தி விளங்குகிறாள். ஆதலால் இரண்டும் பிருதிவித்தலம் என்றழைக்கப் பெறுவதில் யாதொரு குறையுமில்லை. இங்ஙனமே பல தல வரலாறுகளுக்கும் தத்துவப் பொருள் காணப்பட்டால் ஒன்றற்கொன்றுள்ள மலைவு நீங்கும்.

அந்தத் துறையில் மிக நுணுகிய, சிறந்த, உயர்ந்த கருத்துக்களை ஸ்ரீகமலாலய க்ஷேத்திர தத்துவம் என்ற இந்த நூல் விளக்குகிறது.

வேதாகமங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள் ஆகிய இம்மூன்று வகை நூல்களும் முறையே, இலக்கணமும், கட்டளையும், இலக்கியமுமாக அமைந்தவை. ஆகவே இம் மூன்றும் ஒரே வகையான குறிக்கோளையுணர்த்துவன; உணர்த்தும் வகை மட்டும் சிறிது வேறுபட்டிருக்கும். வேதங்கள் ஆகமங்கள் விதி

களாக உணர்த்துவனவற்றை, ஸ்மிருதிகள் கட்டளைகளாக நிறைவேற்றும்; அவைகளை மக்களின் பரிபாக விசேஷங்களுக்குத் தக்கவாறு கதாரூபமாக எடுத்து விளக்குவன புராணங்கள்.

திருவாரூர் மூலாதாரத்தலம் என்பதற்கேற்ப, மூலாதார கணபதி எழுந்தருளியிருப்பதன் சம்பந்தத்தை விளக்கு மிடம் மிக நுணுக்கமானது. திருக்கோயிலுக்குள் அமைந்திருக்கிற பல வேறு கோயில்களின் பெயர்கட்கும், மூர்த்திகளின் பெயர்கட்கும் உண்மைப் பொருள் உணர்த்தப் பெறுகின்றன. தியாகராஜ வைபவமும் தத்துவமும் என்ற பகுதியே இந்நூலின் ஜீவநாடி. அதன் ஜீவகளை "பராசக்தி பீடமாக விளங்குவது திருவாரூர்" என்பதை விளக்கும் சக்தியைப் பற்றிய பல குறிப்புக்களும் ஆகும்.

சிறப்பிற் சிறப்பாகப் படிப்போர் சிந்தையைப் பிணித்துத் தெய்வாமுத சாகரத்தில் அழுத்தும் பகுதி "ஒப்புயர் வற்றதும் நித்தியமாய் நிலை பெற்று விளங்குவதுமாகிய சிவ போகத்தைத் தியாகம் செய்து, கால தேச பரிச்சேதங்களையுடையதும், விகாரத்திற்குட்பட்டதுமாகிய ராஜ போகத்தை மேற்கொண்ட காரணத்தால் தியாகராஜனென்னும் திருநாமம் ஆரூரண்ணலுக்கு ஏற்பட்டதெனக் கூறுதல் பொருத்தமுடையதேயாகும்" என்பதேயாம்.

மேலும் இந்நூலில் சந்தர்ப்பம் கிடைத்த போதெல்லாம் முசுகுந்தார்ச்சனை மந்த்ரங்களுக்கும், முகுந்த நாமாவளி மந்த்ரங்களுக்கும் உண்மைப் பொருள் உரைக்கப்பட்டுள்ளது.

இந்நூலின் இறுதியிலே துணையாக (படிப்பவர்களாகிய நமக்குத் தியாக மூர்த்தித்தியானத்துணையாக) விளங்கும் தியாகேசாஷ்டகம், தியாகராஜநவமணிமாலா முதலிய நூல்கள் சேர்க்கப் பெற்றுள்ளன.

இத்தகைய பெரிய பகவத்கைங்கரியத்தில் ஈடுபட்டு மிக அழகாகப் பல நுணுக்கமான விஷயங்களைச் சேகரித்துத் தொடுத்தவர்கள், பழவந்தாங்கலில் இப்போது வசித்துவருபவர்களும், சென்னை குஹாநந்தமண்டலி ஸ்தாபகாசாரியரும், பராசக்தியின் பக்தி ஸ்வரூபமே தானாக இருப்பவர்களுமாகிய பிரஹ்மஸ்ரீ சுப்பிரமண்ய அய்யர் அவர்கள் ஆவார்கள்.

இவர்கள் இயற்றிய அனேக நூல்களை யூன்றிப் படிக்கும் பாக்கியம் பெற்ற எனக்கு, "இவர்களின் எழுத்துவேகம் எவ்வளவு தூரம் உண்மைகளைத் தெளிய எடுத்து விளக்கும் ஆற்றல் உடையது" என்பதைப் பற்றிச் சொல்லப் பெரிதும் உரிமையுண்டு. ஆதலால் இவர்கள் எழுத்து யாவருக்கும் எளிதில் விளங்கக் கூடியதாகக் கருத்தாழம் உடையதாக-அநுபவத்திற்கு வழிகோலுவதாக விளங்குகின்றது என்ற அளவில் மிக மிக அநுபவிக்கின்றேன்.

மாணிக்கத்தின் ஒளி எந்தக் கோணத்தில் இருந்தாலும் நன்கு விளங்குவது போல, இந்த நூலின் எந்தப்பாகத்தினும் அருமையும் நுணுக்கமும் விளங்குகிறது என்ற அளவில் அமை கின்றேன்.

இந்த நூல் இவ்வளவு அழகாக வெளிவர எல்லா வகையான உபகாரமும் செய்தவர்கள் பிக்ஷாண்டார் கோயில், பண்ணையார். திரு. G. இராஜகோபாலப் பிள்ளையவர்கள். இவர்களும் இவர்களுடைய தர்மபத்தினி மாது ஸ்ரீ அகிலாண்டத்தம்மாள் அவர்களும், நிறை செல்வத் தியாகேசப் பெருமானிடத்தில் நீங்காத பக்தி பூண்டவர்கள். இவர்களுடைய திருக்குமாரர்களாகிய செல்வ ஸ்ரீமான், சிரஞ்சீவி, சொக்கலிங்கம் பிள்ளை, சந்திர சேகரம் பிள்ளை முதலியவர்களும் அப படியே.

ஸ்ரீமான் பிள்ளையவர்கள் விவசாயப்பாட புத்தகங்கள் பல வற்றையும் தாமே எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். மேலும் தியாகப் பிரபந்தங்கள், கமலாம்பிகாபிரபந்தங்கள் முதலியவை களும் இவர்களுடைய திரவிய உபகாரத்தாலேயே வெளிவந்துள் ளன. தமிழ், ஸம்ஸ்கிருதம், இங்கிலீஷ் என்ற மூன்று மொழி களிலும் தக்க புலமையும், புலமையை ரஸிக்கும் பெரிய குணமும் இவர்களிடம் என்றும் உண்டு.

இத்தகைய ஸ்ரீமான் பிள்ளையவர்கள் நெடுங்காலம் எல்லா வகையான இன்பங்களோடும் வாழ்ந்து தமிழ் நாட்டிற்குச் சாஸ் திரப்பணிகள் பலவற்றைச் செய்துவரும் வண்ணம் கமலைப்பரா சக்தி கருணை செய்யவேண்டும் என அவள் பாதகமலங்களைப் பரவு கின்றேன்.

பல்கலைக்கல்லூரி
தருமபுர ஆதீனம்
11—3—1951.

இங்ஙனம்,
வித்வான், தமிழ்ப் பேராசிரியர்.
**ச. தண்டபாணி தேசிகர்.**

உ

சிவமயம்.

# முகவுரை.

திருச்சிற்றம்பலம்.

உயிரா வணமிருந் துற்று நோக்கி
உள்ளக் கிழியினுருவெழுதி
உயிரா வணஞ் செய்திட்டுன் கைத்தந்தால்
உணரப்படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணமேறு தானேறேறி
அமரர்நா டாளாதே யாரூராண்ட
அயிரா வணமேயென் னம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதா ரல்லாதாரே

(அப்பர் சுவாமிகள் தேவாரம்).

பத்தியா யுணர்வோர் அருளைவாய் மடுத்துப்
பருகு தோறமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
திருவுரு விருந்தவா பாரீர்
சத்தியாய்ச் சிவமாய் உலகெலாம் படைத்த
தனிமுழு முதலுமாய் அதற்கோர்
வித்துமாய் ஆரூர் ஆதியாய் வீதி
விடங்கராய் நடங்குலா வினரே.

(திருவிசைப்பா).

திருச்சிற்றம்பலம்.

---

ஸ்ரீ கமலாலய மென்னுந் திருவாரூரானது சோழவள நாட்டிலுள்ள ஒரு சிறந்த சிவக்ஷேத்திரமாகும்.

இது பூமிதேவியின் ஹ்ருதய கமலமென்றும், விராட் புருஷனது மூலாதார மென்றும் ஆகம புராணாதிகள் கூறுகின்றன. இத்திருத்தலத்தின் பெருமை ஸ்காந்த புராணம், நாகர கண்டத்திலுள்ள கமலாலய மாஹாத்மியத்தில் மிகவிரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றது.

ஒரு க்ஷேத்திரத்தின் சிறந்த அங்கங்களாகும் மூர்த்தியின் தத்துவம், ஸ்தலத்தின் மஹிமை, தீர்த்தத்தின் விசேஷம் ஆகிய இம்மூன்றையும் பெற்று விளங்குவது இத்தலமாகும்.

ஸ்ரீ கமலாலய மாஹாத்மியத்தை வடமொழியிலிருந்து தெள்ளிய தீந்தமிழில், செய்யுள் வடிவமாக மொழி பெயர்த்தவர் சைவஸ்ரீ, ஸம்பந்த முனிவரென்னும் பெரியாராவர். இந்நூல் அச்சிடப் பட்டு விளங்குகின்றது.

மேலே கூறப்பட்ட ஸ்ரீ அப்பர் சுவாமிகளின் தேவாரப் பாசுரத்தாலும், பூந்துருத்தி நம்பிகாட நம்பி அவர்கள் அருளிச், செய்த திருவிசைப்பாவினாலும் இத்தலத்தின் பெருமையும் மூர்த்தியின் தத்துவமும் துருவி ஆராய்பவர்க்குப் புலப்படாமற் போகாது

ஹே ! புற்றிடங்கொண்ட திருவாரூர் அம்மானே ! ! இடைகலை பிங்கலை இவைகளில், இயற்கையாய்ச் செல்லும் உயிர்ப்பை (மூச்சை) அடக்கிக் கும்பகம் செய்து, நினது வடிவத்தை நன்கு உற்று நோக்கி, அதனால் மனவமைதி பெற்று, அங்ஙனம் நிச்சலமாய் நின்ற வுள்ளக்கிழியில் நின் உருவத்தைப் பதித்துத் தியானித்து, மும்மலங்களோடு கூடிய தமது ஆன்மாவை நினக்கு அர்ப்பணம் செய்து ஒப்புவித்தால், அப்பொழுதே அவர்கள் சிவஞானிகள் ஆகின்றனர்.

நீ அவர்களோடு இரண்டறக் கலந்து வாழ்கின்றனை. உன்னோடு இரண்டறக் கலந்து வாழ்தற்குரிய சாதனைகளைச் செய்தற்கு, நினது அருள் நோக்கம் வேண்டும். நின் அருளின்றேல் யாவரும் சிவஞான சாதனைகளைக் கடைப் பிடித்தொழுகவுரிமை யற்றவர்களே யாவர். மும்மலங்களோடு கூடிய ஆன்மாக்களைத் தாங்கள் ஏற்றுக் கொள்ளுவீர்கள் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை. ஏனெனின் தாங்கள், ஆயிரம் மருப்புடைய சிறந்த ஊர்தியாகும் அயிராவணத்தையும், அமரர் நாட்டரசாட்சியையும் பொருட்படுத்தாது, விடுத்து ஆனேறாகும் விருஷப வாகனத்தையும் மண்ணுட்டிலுள்ள திருவாரூர் ஆட்சியையும் சிறந்தனவென்று மதித்து, ஏற்றுக்கொண்டீர்.

இங்ஙனம் பொருள்படும் தேவாரப் பாசுரத்தினால் திருவாரூரைப் பற்றிய பலவரலாறுகளும் யோக ரகசியங்களும் வெளியாகின்றனவல்லவா ?

அன்றியும் மேலே கூறப்பட்ட திருவிசைப்பாவும் திருவாரூரண்ணலின் ஸ்வரூப தத்துவத்தை நன்கு உணர்த்துகின்றது: அதுவருமாறு :—

பார்முதல் சிவமீறாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களுக்கு உட்பட்டு, அவற்றுள் முதன்மையாய் விளங்கும் சக்தி, சிவதத்

த்துவங்கட்குக் காரணமான காமகலா ஸ்வரூபமாய், அதற்குங் காரண மான துரீய நிஷ்கள சிவ ஸ்வரூபமாய் விளங்கும் ஸச்சிதாநந்த வள்ளல் திருவாரூரில் வீதிவிடங்கராய் அஜபா நடனம் புரிகின்றனர். அருளே வடிவமான இறைவனைப் பக்தியின் மேம்பாட்டால் உணர்ந்து அருட்டேனைப் பருகுந்தோறும், அது, ஆராவமுதாய் இலங்கும் என்பதாம்.

இதனால், வீதிவிடங்கப் பெருமானுக்கும் தியாகராஜ மூர்த்தியின் ஸ்வரூபதத்துவம் நன்கு விளங்குகின்றது.

இந்த இரண்டு அருண்ஞானிகளின் திருவாக்கையும், திருவாரூர்ப் புராணத்தையும், முசுகுந்த ஸஹஸ்ர நாமங்களையும், வடமொழி அஜபா ரஹஸ்யம், கமலாலய மாஹாத்மியம் முதலியவற்றையும் ஆதாரமாய் வைத்துக் கொண்டுதான், ஸ்ரீ கமலாய க்ஷேத்திர தத்துவம் என்னும் இச்சிறு நூல் இயற்றப்பட்டுள்ளதே தவிர அடியேனது ஸ்வகபோல கல்பிதமாக இயற்றப்பட்டதன்று. இவ்விஷயம் விவேகிகட்குப் புலப்படாமற் போகாது.

இது திருச்சிராப்பள்ளிக் கடுத்த பிக்ஷாண்டார் கோயில் பெருநிலப்பண்ணையாளரும், வைதிக சைவத்தின் வாஸ்தவவுணர்ச்சியும் ஒழுக்கமும் உடையவரும், ஸ்ரீ கமலாலய மென்னும் திருவாரூர் தியாகேசனது திருமலரடிகளிற் செருகும் தூயமனமுடையவரும், பராசக்தியாகும், ஸ்ரீ கமலாம்பிகையிடத்திற் கனிந்த அன்புடையவருமாகிய திருவாளர் கோ. இராஜகோபாலப் பிள்ளையவர்களின் நல்விருப்பத்திற் கிணங்க அடியேனால் இயற்றப் பட்டதாகும்.

சிவ புண்ணியத்திலேயே ஸதா ஈடுபடும், சித்தத்தையுடைய இப் புண்ணியவான், தியாகேசனுக்கும் கமலாம்பிகைக்கும் உரியனவான புராதன பிரபந்தங்களை, வெளிப்படுத்தியும், இயற்றுவித்தும் ஷை கமலாலயச சிறப்பை யாவரும் எளிதில் உணருமாறு செய்து வருகின்றனர்.

இப்பெருந் தொண்டில் ஈடுபாடுடைய ஷை பிள்ளையவர்களுக்கும் அடியேனுக்கும் நட்பையுண்டாக்கி வைத்தவர், தருமபுர ஆதீனம். பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் சிவஸ்ரீ S. தண்டபாணி தேசிகர் அவர்களேயாவர். இவரால் ஏற்படுத்தப்பட்ட நட்பே இச்சிறு நூலின் தோற்றத்திற்குக் காரணமாமென்று கூறுதல் மிகையாகாது.

தல புராணங்களுக்குத் தத்துவம் கூறுவது அநுபவ ஞானிகட்கே உரியது. இங்ஙனமிருக்க அடியேன் மேற்படி கமலாலய க்ஷேத்திரத்திற்குப் புராண வரலாற்றைக் கொண்டு தத்துவம் எழுதத்துணிந்து முன்வந்ததற்குக் காரணம் ஸ்ரீ மான் பிள்ளையவர்களின் அன்புவலையிற் சிக்கி மயங்கியதே யாகும்.

பிரமாணங்களைக் கொண்டு நுட்பமான தத்துவ ஆராய்ச்சி செய்யும்போது, சிவனருளே அடியேனது சித்தத்தில் ஸ்புரண ரூபமாய் விளங்கி, இந்நூல் ஒருவாறு முற்றுப்பெறும்படி செய்வித்ததாதலின், இந்நூல் அவ்வருட்சக்திக்கே உரியதாகும்.

இந்நூலில், திருவாரூர் ஸ்தலத்திற்குரிய பலநுட்பமான வரலாறுகள் தத்துவ ஆராய்ச்சியோடு விமர்சிக்கப் பட்டுள்ளன. இவ்விஷயம் விஷய அட்டவணையால் வெளியாகும்.

இவ்வரிய பெரிய சிவபுண்ணியத்தில் ஈடுபடும்படிசெய்வித்த திரு S. தண்டபாணி தேசிகர் அவர்களுக்கும் திரு. பிள்ளையவர்களுக்கும் அடியேனது நன்றியுரித்தாகுக.

அடியேனது பிரமாதாதி தோஷங்களால் சாஸ்திர விரோதமான சில பிழைகள் இருக்கலாம். அவற்றைப் பெரியோராகிய சிவஞானிகள் பொருட்படுத்தாது பொறுத்துக் கொள்வது அவர்க்குப் பூஷணமே யாகும்.

ஸ்ரீ குஹாநந்த மண்டலீ
பவழந்தாங்கல்
பறங்கிமலை P.O.
மதராஸ்-16.
15—3—1951.

இங்ஙனம் விதேயன்.
N. **சுப்பிரமணிய அய்யர்.**
(சிதாநந்தநாதன்.)



திருவாரூர் கிழக்குக் கோபுரம்

# ஸ்ரீ கமலாலய க்ஷேத்ரதத்துவ

## விஷய அட்டவணை

விஷயம் பக்கம்

---

உ

ஸ்ரீ வாதாபி கணபதயேநம:

# திருவாரூரென்னும்

# ஸ்ரீகமலாலய

# க்ஷேத்திர தத்துவம்.

ஸ்ரீகமலாலயமென்று பிரஸித்திபெற்ற திருவாரூரென்னும் ஸ்தலமானது, சோழ நாட்டிலுள்ளதோர் ஒப்புயர்வற்ற சிவஸ்தலமாகும். இது மூலாதார க்ஷேத்திரமென்று புராணங் கூறுகின்றது.

ஸ்ரீமதகண்ட பரிபூர்ண ஸச்சிதாநந்த ஸ்வரூபராகிய பரமேச்வரன், ஆன்மகோடிகள் உய்யுமாறு இப்புவியில் கோயில் கொண்டிலகும் தலங்கள் பலவுள. இத்தலங்களுக்குச் சிவஸ்தானங்கள் என்று பெயர். சிவம் விளங்கும் ஸ்தானத்திற்குச் சிவஸ்தானமென்பது காரணப்பெயராகும்.

ஸ்தூலம், ஸூக்ஷ்மம், பரம் எனச் சிவஸ்தானங்கள் மூவ்வகைப்படும்.

இவற்றுள் பரமானது சப்த வடிவினதாகும். பரை, பச்யந்தீ மத்திமை, வைகரீ என்னும் நான்கு விதமான வாக்குக்களும் இதில் அடங்கியவையேயாகும்.

இவற்றுள் பரை, பச்யந்தீ யென்னும் இரண்டும் யோகிகட்கே புலனாந்தன்மையன. மத்திமையென்பது வைகரீ வாக்கின் ஸூக்ஷ்ம வடிவினதாகும். வைகரீ வாக்கானது அகாராதி க்ஷகா

ராந்தமான அக்ஷர ஸ்வரூபமானது. இந்த ஐம்பத்தோரக்ஷரங்களும் சிவம் விளங்கும் சிவஸ்தானங்களேயாகும்.

அன்றியும், மேற்கூறிய அக்ஷரங்களும், அவற்றாலாய பதங்களும், பதங்களாலாய மந்த்ரங்களும் சிவஸ்தானங்களேயாமென்பது வேதாகமங்களின் துணிபு. ஆகமங்கள் வர்ணாத்வா, பதாத்வா, மந்த்ராத்வா வென்று கூறுவது இவற்றையேயாகும். பஞ்சாக்ஷராதி மஹா மந்த்ரங்களும், மஹாவாக்கியங்களும் இவற்றில் அடங்கும், இவையாவும் பராஸ்வரூப சிவஸ்தானங்கள்.

இனி, ஸூக்ஷ்ம சிவஸ்தானங்களைப்பற்றி ஆராய்வோம். பிண்டமாகும் சரீரத்தில் ஆந்தரமாய் விளங்கும் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம் முதலிய ஷட்சக்கிரங்கள் ஸூக்ஷ்ம வடிவமாகும். இவை, ஸுஷும்ன நாடியில் ஸம்பந்தப்பட்டு விளங்குவன. மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞையென்னும் ஆறு சக்கிரங்களும், முறையே, பிரிதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம், மனம் என்பவற்றின் தத்துவத்தோடு விளங்குவனவாகும்.

ஆக்ஞா சக்கிரத்திலுள்ள மனஸ்தத்துவமே ஜீவான்மாவின் உபாதியாகும்.

மத்தியநாடியாகும் ஸுஷும்னைக்கு இரண்டு பக்கங்களிலும் இடை, பிங்கலையென்னும் இரண்டுநாடிகளுண்டு. இவை ஸூர்ய சந்திரர்களைக்குறிக்கின்றன. ஆகவே, சரீரமாகும் பிண்டத்தில், பிரிதிவியாதிபஞ்சபூதங்களும், மனஸ்தத்துவத்தோடுகூடிய ஜீவான்மாவும், சூரியசந்திரர்களும் ஆக எட்டுவடிவங்கள் சித்தித்தன. இவை ஸூக்ஷ்ம அஷ்டமூர்த்த வடிவமாகும். ஆதலால் ஸூக்ஷ்ம சிவஸ்தானங்களாம்.

**ஸ்தூலசிவஸ்தானங்கள்.—**

ஐதஜ்ஞாகரணா3ய ஹாவிஷ்ணு: ஷுணஜ்வவாஸெஹிஃ ।
தவஜூா,நாகிஜெவ ஸஹுமிஹிலாக்ஷகாவாகர॥

𑌈𑌶𑍍𑌵𑌰 𑌉𑌵𑌾𑌚 :—

𑌦𑍇𑌹𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌨𑌿 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌦𑍇𑌹𑌾𑌦𑍇𑌹𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑍇 ।
𑌅𑌤𑍀𑌵 𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑍋𑌷𑌣𑌮𑍍 ॥
𑌯𑌾𑌤𑍍𑌯𑍇𑌤𑍇 𑌹𑍍𑌯𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑍍𑌯𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌨𑌿 𑌶𑌂𑌭𑍁𑌨𑌾 𑌮𑍁𑌨𑍇
𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌨𑌿 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑌾𑌨𑌿 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 ॥

(ஸூ-ஸம்-ய-வை-கண்-31 அத்-68, 69, 70 சுலோ.)

என்னும் பிரமாணத்தின்படி, சிவஸ்தானங்கள் அத்தியாத்மமென்றும், அதிபூதமென்றும் இருவகையினவென்று ஏற்படுகின்றது.

ஒரு சரீரத்தில், பிரஹ்மரந்திரம், முகமண்டலம், இதிலுள்ள கண், காது, மூக்கு, கன்னம், உதடு, பற்கள், கழுத்து முதலியனவும், கைகால்களின் ஸந்திகள், வலப்பக்கம், இடப்பக்கம், பிருஷ்டம், நாபி, ஹ்ருதயம் முதலியனவும், மூலாதாராதி ஷட் சக்கிரங்களும் அத்தியாத்ம சிவஸ்தானங்களாகும்.

குறிப்பு;—மேற் கூறப்பட்டவை யாவும் பாஹ்யம், ஆந்தரம் என்னும் இரண்டுவித மாத்ருகா நியாஸங்கள் செய்தற்குரிய இடங்களேயாகும். இவற்றுள் மூலாதாராதி ஷட் சக்கிரங்கள் அந்தர் மாத்ருகா நியாஸம் செய்யும் ஸ்தானங்களாம்.

அன்றியும், ஒரு சரீரத்திலுள்ள துவக்கு, மாம்ஸம், இரத்தம், எலும்பு, சுக்கிலம் முதலிய தாதுக்களும், பிராணாதி வாயுக்களும், ஜீவனும் சரீர முழுமையும் வியாபித்துள்ளனவாகும். இவைகளும் சிவஸ்தானங்களே.

இனி, அதிபௌதிக சிவஸ்தானங்களை விமர்சிப்போம். அதிபௌதிக சிவஸ்தானங்கள் எண்ணிறந்தன. இவை அண்டத்திலுள்ளனவாகும். இவற்றுள்,

𑌜𑌗𑍍𑌵𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌸𑌾𑌵𑌰𑍍𑌯𑌂 𑌚 𑌤𑌥𑌾𑌵𑍃𑌕𑍍𑌷𑌕𑌦𑍍𑌤𑍍𑌤𑌮𑍍 ।
𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌸𑌾𑌵𑌰𑍍𑌯𑌂 𑌚 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌧𑌾𑌃 ॥

(ஸூ-ஸம்-ய-வை-கண். 31 அத்-87 சுலோ.)

என்னும் பிரமாணத்தின்படி, ஐப்யேஸ்வரம் அதாவது பஞ்ச நதமென்னும் திருவையாறு, வல்மீகமென்னும் திருவாரூர், கஜாரண்யமென்னும் திருவானைக்காமுதலிய சிவஸ்தலங்கள் அதிபௌதிக சிவஸ்தானங்களிற் சிறந்தனவாகும்.

அண்டமாகும் பிரபஞ்சமே அதிபௌதிகமாகுமெனக்கூறப்பட்டது. அண்டங்கள் பல. அநேகஆயிரம் அண்டங்கள் விராட் புருஷனாகும் காரணேஸ்வரனது சரீரமாகுமென்பது சாஸ்திர ஸித்தமாகும்.

ஒவ்வொரு ஜீவான்மாவின் வியஷ்ட்டி சரீரமாகும் பிண்டத்தில், முன்னர் எங்ஙனம் மூலாதாராதி சக்கிரங்கள், ஸப்ததாதுக்கள், பிராணாபானாதிகள், முகமண்டலம், கைகால்களின் ஸந்திகள் முதலியவை கூறப்பட்டனவோ, அங்ஙனமே, பல்லாயிரங்கோடி ஜீவான்மாக்களின் ஸமஷ்டிவடிவினனாகிய விராட்புருஷனது விஸ்வ சரீரத்திலும் எல்லாம் இருப்பனவாகக்கூறப்படும்.

பிண்டத்திலெங்ஙனமோ அண்டத்திலும் அங்ஙனமே என்பது நியமமல்லவா?

ஆகவே, விராட்சரீரமாகிய அண்டத்தில் மூலாதார க்ஷேத்திரமாய் விளங்குவது திருவாரூராகும். ஒருஜீவனது வியஷ்டிசரீரமாகிய பிண்டத்தையபேக்ஷித்தது அண்டம் அதிபௌதிகமாகுமென்பது ரஹஸ்யமாம். இந்த அண்டம் விராட் புருஷனுக்கு அத்யாத்மமாகும்.

ஆகவே, வன்மீக க்ஷேத்திரமென்னும் திருவாரூர் விராட் புருஷனது சரீரத்தில் மூலாதார வடிவினதாகுமென்பது ரஹஸ்யமாம்.

இத்திருத்தலத்தைப்பற்றி வடமொழிஸ்காந்தபுராணம், நாகர கண்டம், ஸ்ரீகமலாலய மாஹாத்மியம் மிகச்சிறப்பாகக்கூறுகின்றது. இதனைச் செந்தமிழில் மொழிபெயர்த்து, 2929 விருத்தப் பாக்களில் சைவஸ்ரீ சம்பந்த முனிவர் திருவாரூர்ப்புராண மென்னும்

திருநாமத்தோடு இயற்றி அது அச்சிடப்பட்டிருக்கின்றது. இதனை யாதாரமாய்க்கொண்டுதான் கமலாலய க்ஷேத்திரதத்துவ மென்னும் இச்சிறு நூல் இயற்றப்படுகின்றது.

திருவாரூர்த்தலத்திற்குப் பலதிருநாமங்களுள, அவை ஸ்ரீநகரம், கமலை, தேவாஸ்ரியம், க்ஷேத்ரவரம், வன்மீகநாதபுரம், மஹாநகரம், மூலாதார க்ஷேத்திரம், அந்தரமாஹேஸ்வரம், கோநகரம், ஹாடகேஸ்வரம், ஸ்கந்தபுரம், முசுகுந்தபுரம், தேவயாகபுரம், சமத்காரபுரம், கலிசெல்லாநகரம் முதலியனவாகும். இத்தலத்திற்கு மேற்கூறப்பட்ட திருநாமங்கள் ஏற்பட்ட காரணம் திருவாரூர்த் தலபுராணத்தில் பரக்கக் காணலாம்.

மூலாதார க்ஷேத்திரம் திருவாரூரென்று முன் கூறப்பட்டது. இதன் தத்துவம் ஈண்டுச்சுருக்கமாய் விமர்சிப்போம்.

மூலாதாரத்தில் தேவதை மஹாகணபதி; திருவாரூர் ஸ்தலக் கணபதிக்கு வாதாபி கணபதி யென்று பெயர், ஆரூர்ப்புராணம், பாயிரம், வாதாபி விநாயக ஸ்துதியில், "குடிலையென்னும் இலகு தனிக்கம்பத்தில் நின்று அன்பர் மனத்தண்டத் தினிதுலாவும்" என்று கூறப்பட்டிருப்பதை யூன்றியாரயின், குடிலை யென்னும் குண்டலினீ சக்தியின் ஆதாரமாகும் மூலாதார ஸ்தானமென்பது புலப்படாமற் போகாது. அன்றியும், "அன்பர் மனத்தண்டத்து இனிதுலாவும்" என்ற அடியால் அண்டமாகும் பிரபஞ்சமானது அன்பர்களது மனத்தின் விரிவேயென்பதும் நன்கு விளங்கும்.

"நுவலும் அண்டத்தனிப்புத்தேள் மூலாதார மாதலினால் மூலாதாரமெனமொழிவார்" என்னும் பிரமாணம் முற்கூற்றை வலிவுறுத்துகின்றது.

ஸ்ரீநகரம்;—பண்டாஸுரனது உபத்திரவத்திற்குச் சகியாமல் தேவர்கள் யாவருங்கூடி ஸ்ரீலலிதாம்பிகையைக்குறித்து நெடுநாள் தவமியற்றியும், பராசக்தி பிரத்தியக்ஷமாகாமையால் அவர்கள் ஒரு மஹாயாகமியற்றினர். அதில் மஹாயாகவிதானப்படி ஸகலதேவர்களின் அங்கங்களையும் சரீரங்களையுங்கூட அந்தயாககுண்டத்தில்

ஹோமம் செய்ய, அவ்வக்கினிகுண்டத்திலிருந்து லலிதாதேவி கமலாம்பிகை யென்னும் திருநாமத்தோடு ஆவிர்ப்பவித்தனள். இவ்விஷயம் பிரஹ்மாண்ட புராணத்தில் விரிவாய்க்காணலாம். கமலை என்பது காமகலை யென்பதன் மருவு; காமகலையே பராசக்தி.

பிரணவம் எங்ஙனம் சிவவாசகமோ, அங்ஙனமே உமா, என்பதும், ஸ்ரீம் என்பதும், ஈம் என்பதும் சக்திவாசகங்களாகும்.

அன்றியும், தேவிபாகவதம், 7வது ஸ்கந்தம், 38வது அத். 28வது சுலோகம்,

உத்பலாக்ஷீ ஸுவர்ணாக்ஷே ஸ்தாண்வீசீ ஸ்தாணுஸம்ஜ்ஞகே।
கமலாலயே து கமலா ப்ர[illegible]ம்பிகே ॥

என்னும் பிரமாணத்தின்படி, திருவாரூரென்னும் கமலாலயம் அறுபத்து நான்கு சிறந்த சக்தி பீடங்களுள் ஒன்றாகும்.

கமலை மஹாயாக சிதக்னி குண்டத்தில் சித்ஜோதிஸ்வரூபமாய் ஆவிர்ப்பவித்தனள். மேருபிரஸ்தாரம், கைலாஸப்பிரஸ்தாரம், பூப்பிரஸ்தாரம் என மூன்றுவகையாய் விளங்கும் ஸ்ரீசக்ரராஜத்தை அதிஷ்டித்துக்கொண்டுவிளங்கிப் பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன்முதலிய பஞ்சகாரணேஸ்வரர்களாலாய மஹாமஞ்சத்தின் மீது வீற்றிருந்து, தேவர்களுக்குப்பண்டாஸுரனால் ஏற்பட்டிருந்த துன்பத்தை, யவ்வஸுரனைச் ஸம்ஹாரம் செய்து நீக்கினள்; பின்னர் தானே, ஸ்ரீகாமேஶ்வரனை மணந்து, மந்த்ர ரத்தின ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்தனள். இங்ஙனம் அமர்ந்துள்ள ஸ்வரூபந்தான் ஸோமாஸ்கந்த வடிவ தியாகராஜ வடிவமாகும் இதனால் இத்தலத்திற்கு ஸ்ரீபுரம், தேவயாகபுரம், கல்லியாணபுரம் என்னும் திருநாமங்கள் ஏற்பட்டன.

காமேஶ்வரி—காமேஶ்வரர்களின் ஸ்வரூபமே ஸோமாஸ்கந்த வடிவ தியாகராஜராகும் என்று முன் கூறப்பட்டது. ஸோமாஸ்கந்த வடிவம் இருபத்தைந்து சிவமூர்த்தங்களில் ஒன்றாகும். சிவம், சக்தி, ஸ்கந்தன் என்னும் மூன்று வடிவங்களின் ஐக்கியமே

ஸோமாஸ்கந்த மூர்த்தியாகும். சிவம்=ஸத்து, சக்தி=சித்து, ஸ்கந்தன்=ஆநந்தம்; ஆதலின், ஸச்சிதாநந்த ஸ்வரூபமே ஸோமாஸ்கந்த வடிவ தியாகராஜர்.

2. கமலாலயம்=திருவாரூர். இத்தலத்தில் மஹாலக்ஷ்மி ஸ்ரீவல்மீகநாதரைக் குறித்துத் தவமியற்றி, ஸ்ரீ மஹா விஷ்ணுவைப் பதியாக அடைந்தனள்.

திருமகள் ஸதா ஸர்வ காலமும் இத்தலத்தில் வஸிப்பதனால் கமலாலயம் என்னும் பெயரெய்திற்று.

கமலை=மஹாலக்ஷ்மிக்கு, ஆலயம்=வஸிக்குமிடம். திருவாரூர் என்பதன் பொருளும் இதுவே.

கமலையென்பதற்கு முத்தித்திரு (மோக்ஷலக்ஷ்மி) வென்றும் பொருள் செய்யலாம். ஆன்மகோடிகளின் இதயக்கமலமானது மும்மலங்களின் நீக்கத்தில் நன்கு மலரும், மலரவே, அதற்கு அதிஷ்டானமான அருட் சக்தியாகும் சிஜ்ஜ்யோதி தானே பிரகாசிக்கும். பராவரமான சிஜ்ஜ்யோதி பிரகாசிக்கவே, அஞ்ஞானத்தாலாய ஸகல மயக்கங்களும் ஒழியும்; ஒழியவே ஸந்தேகங்களெல்லாம் நசிக்கும்; நசிக்கவே நல்வினை தீவினைகளென்னும் ஸகல கர்மங்களும் நீங்கிவிடும். இந்நிலைக்குத்தான் நித்தியாநந்த மோக்ஷமென்று பெயர். இது,

ஹிதயதேஹரதயமமஹ்யிஸ்ஹிதயம்தேஸவஊஸமஹாயா: ।
க்ஷீயம்தேஅாஸ்யகஊஊணிதஸ்மிநுதரஷேவபராவரே ॥

என்னும் உபநிஷத் பிரமாணத்தால் வெளியாகின்றது. ஆகவே, இத்தலத்தைத்தரிசித்த உத்தம அதிகாரிகட்கு மோக்ஷம் ஸித்திப்பது நிச்சயம்.

3. வல்மீகநாதபுரம்:—

அகலிரு விசும்பிற்கோமா னாக்கிய புற்றினூடு
மகிழ்சிறந்தா திமுக்கண் வானவன் மருவுமாற்றால்
புகழ்செய்வன்மீகநாதபுரமெனப்புகழும்தொல்லைத்
திகழ்தருதெய்வ நாமம் சிறந்தது திருவாரூர்க்கே.

இத்தலத்தில் தேவேந்திரனால் ஆக்கப்பட்ட ஒரு புற்றில் பரசிவஸ்ரூபம் அதிஷ்டித்து விளங்கிய காரணத்தினால் அவருக்கு வல்மீகநாதரெனும் திருநாமம் ஏற்பட்டு, அதனால் இத்தலத்திற்கு வன்மீகநாதபுரமெனும் பெயர் அமைந்தது.

வல்மீகம்—புற்று. இது பிரிதிவி. இந்த க்ஷேத்திரம் மூலாதார க்ஷேத்திரமாதலினால் அந்த சக்கிரத்தின் தத்துவம் பிரிதிவியேயாகும்.

ஜீவான்மாவே தேவேந்திரன். சிவம் விளங்கும் அஷ்ட மூர்த்தங்களில் ஒன்றான பிரிதிவி (புற்றில்) யில் சிவபாவனைசெய்து ஸாக்ஷாத்காரமெய்தினன். மூலாதார க்ஷேத்திரத்தில் விளங்கும் சிவம் வல்மீக நாதரேயாவர்,

4. ஹாடகேஸ்வரம்:—இத்தலத்தில் பிலவாயில் ஒன்றுண்டு; அதற்கு நாகபிலம் என்று பெயர். இப்பிலத்தில் விளங்கும் சிவத்திற்கு ஹாடகேஸ்வரரென்று பெயர்.

இப்பெரும் பிலத்தில் அநாதியாய் உமையோடு
இலங்கொளி ஹாடகேச்சுரப்பேர்
ஒப்பிலா மூர்த்தியுல கெலாமுய்ய
ஊழிதோறூழி வீற்றிருக்கும்.

என்னும் பிரமாணம் ஈண்டு அறியத்தக்கது.

இந்த பிலம் வன்மீக நாதரின் ஆலயத்திற்குத் தென் பக்கத்தில் உள்ளது. இதுதான் ஹாடகேச்சுரமெனப்படுவது. இந்த பிலவாயில் பாதலத்தின் எல்லையாகும். இந்த ஹாடகேஸ்வரரைப் பிரஹ்மா, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்கள் வழிபட்டுப் பெரும்பயனெய்தினர். "சித்திரைமாதம் கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசியன்று இரவில் இந்த ஹாடகேஸ்வரரைப் பூசித்தால் இந்திர பீடத்தில் அமர்ந்து விளங்குவர்" என்று தல புராணங்கூறுகின்றது. இது ஒரு சிறந்த யோக ரஹஸ்யத்தை வெளியாக்குகின்றது.

இந்த ரஹஸ்யம் யோகஸித்திபெற்ற ஸத்குருவின் முகமாய் அறிதலே சாஸ்திர ஸம்மதம்; ஆயினும், அங்ஙனம் அறியவேண்டு மென ஒருக்கத்தையுண்டாக்கவே ஈண்டுச் சங்கிரகமாய் விமர்சிக் கப்படுகின்றது.

வல்மீகேஸ்வரர் விளங்குவது மூலாதார க்ஷேத்திரம். மூலா தாரம் ஸுஷும்ந நாடிக்கு அடியில் அதற்கு ஓர் ஆதாரமாய் விளங்குகின்றது. இந்த ஸுஷும்னைக்குப்பிரஹ்மநாடி யென்றும், மேருதண்டமென்றும், தேஜோதண்டமென்றும் பல பெயர்க ளுண்டு. இது மூலாதாரத்திலிருந்து சிரோபாகத்திலுள்ள பிரஹ்மரந்திரம் வரையில், சரீர மத்தியில் ஊடுருவிச்செல்லுகின் றது. இதற்கு வலத்திலும், இடத்திலும் இடை, பிங்கலையென் னும் இரண்டு நாடிகள் செல்லுகின்றன. இவை முறையே ஸூர்ய நாடியென்றும், சந்திர நாடியென்றும் கூறப்படும். குண்டலினி யென்னும் ஜீவசக்தியானது, மூச்சுக்காற்றாகும் உஸ்வாஸ நிஸ்வாஸ வடிவ ஹம்ஸங்களின் மூலமாய், ஸூர்ய சந்திர நாடிகளில் ஸஞ் சாரம் செய்கின்றதென்பது யோக சாஸ்திர சித்தாந்தமும், ஒவ் வொரு ஜீவனுடைய பிரத்தியக்ஷ அனுபவமுமாகும். ஒரு ஜீவன் ஒரு நாள் ஸூர்யோதயத்திலிருந்து, மறுநாள் ஸூர்யோ தயம் வரையில் 21,600 சுவாஸங்கள் விடுகின்றான். இந்த சுவா ஸங்கள், சில ஸமயங்களில் ஸூர்ய நாடியிலும், சில ஸமயங்களில் சந்திர நாடியிலும் செல்லுகின்றன. சுவாஸங்களின் கதியை யுண ரும் ஸ்தானம் நாஸித்துவாரமேயாகும். வலது நாஸியில் சுவாஸம் ஸஞ்சரிக்கின் ஸூர்ய நாடியில் செல்லுகின்றதென்றும், இடது நாஸியில் ஸஞ்சரிக்கின் சந்திர நாடியில் செல்லுகின்றதென்றும் அறியலாம். வெளியே உள்ள காற்றை நாஸித்துவாரத்தின் மூல மாய் உள்ளுக்கு இழுப்பதும், அதை மறுபடி வெளியே விடு வதும்தான் சுவாஸ மெனப்படுவது. இதுதான் காலத்தின் ஸூக்ஷ்மதமமான பகுதியாகும். மிகவும் ஸூக்ஷ்மமான இந்தப்பகு தியிலும் ஸூர்ய சந்திரர்களின் கதியே காரணமாயிருப்பதால் காலத்திற்குச் சூரிய சந்திரர்கள் காரணமாகின்றனர், திவாகரன் (பகலைச்செய்பவன்) சூரியன்; நிசாகரன் (இரவைச்செய்பவன்)

சந்திரன். 21,600 சுவாஸங்கள் கொண்டது ஒரு பகலும், ஒரு இரவுமான ஒரு நாள்; பதினைந்து நாட்கள் கொண்டது ஒரு பக்ஷம்; இரண்டு பக்ஷங்கள் ஒரு மாதம்; பன்னிரண்டு மாதம் ஒரு ஸம்வத்ஸரம்; ஒரு ஸம்வத்ஸரத்தில் ருதுக்கள், அயனங்கள், விஷுக்கள் முதலியவை அடங்கியுள்ளன. காலஸ்வரூப விசாரம் சுருதிஸித்தமானது. இவ்வளவு விஸ்தாரமான கால பரிணாமத்திற்கெல்லாம் ஒரு ஜீவனுடைய சுவாஸமே சிறந்த காரணம் என்பது பரமரஹஸ்யமாம்.

நிற்க, அமாவாசையென்பது சூரியனும், சந்திரனும் ஒன்று சேர்வதேயாகும். என்றால், அமாவாசையன்று சூரியனும், சந்திரனும் ஒன்றாய் உதிக்கின்றனர், ஒன்றாய் அஸ்தமிக்கின்றனர். ஆகையாற்றான் அமாவாசையிரவில் சந்த்ரப்பிரகாசம் இல்லை. இதை அதிபூதமாகும் பாஹ்ய அண்டத்தில் காண்கிறோம். இங்ஙனமே அத்யாத்மமாகும் பிண்டத்திலும் உண்டு. ஸூர்ய நாடியும் சந்திர நாடியும் ஒன்று சேரும் ஸ்தானம் மூலாதாரம்.

இந்த ஆதார சக்கிரத்தில் ஜீவசக்தியாகும் குண்டலினி இருக்கும்போது சுவாஸம் எந்த நாசித்துவாரத்திலும் செல்லாது. இது பிரத்தியக்ஷ அநுபவம். இங்ஙனம் ஒருவனது சுவாஸம் சூரியநாடியிலும், சந்திரநாடியிலும் செல்லாதிருக்குமேயாயின் அது அமாவாசை யெனப்படும். அப்பொழுது அவனது ஜீவசக்தி மூலாதாரத்தில் இருக்கின்றதென்று உணர்தல் அவசியம். மூலாதார க்ஷேத்திரம் திருவாரூரல்லவா? இந்த க்ஷேத்ரேசன் புற்றிடங்கொண்டபுனிதனாகும் வல்மீகேஸ்வரனல்லவா? இங்கே அமாவாசை விசேஷமானது.

இந்த வன்மீகநாதர் ஆலயத்திற்குச் சமீபமாய்த் தென்பாரிசத்தில் அதாவது வன்மீகநாதரின் வலதுபுறத்தில் விளங்குவது ஹாடகேச்சுரம் என்று முன்கூறப்பட்டது. இதுதான் நாகபில மென்பது மல்லவா? ஒரு சரீரத்தில், மூலாதாரத்திற்கு அதிஸமீபத்தில், வலப்புறமாய் சூரியநாடியில் விளங்குவது நாடிகந்தமாகும். இந்த நாடிகந்தம் குக்குடாண்ட (கோழிமுட்டை) வடிவமாய் விளங்கும். இதற்குக்கீழ் ஒருபிலமுண்டு. இதற்குச் சக்திபில மென்று

பெயர். இதுதான் ஸுஷும்ன மூலமாய்ப்பிரஹ்மரந்திரம் செல்லும்வாயில் நாடீகந்தம் (கிழங்கு) என்பதுதான் ஹாடகேஸ்வரம். இந்த க்ஷேத்திரத்திலுள்ள ஹாடகேச்சுரரைச் சித்திரைமாதம், கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி, இரவு தரிசிப்பவர் அமரருலகம் சென்று அந்தமில் இன்பம் எய்துவரென்று புராணங்கூறுகின்றது. அஃதாவது:—

அந்த வேலையி லணையபா தலத்தினை வலங்கொண்
டந்த மூர்த்தியை யொருமுறை தொழுமவர் யாரும்
அந்த ரத்தவர் போற்றிட வமருல கடைந்தாங்
கந்த முற்றிடாத் திருவொடும் பல்லுக மமர்ந்து,

வெய்ய பாசமாம் வனத்தினை வேரற வீட்டி
மையு லாவிய மிடற்றிறைன் மறைச்சிலம் பொலிக்கும்
செய்ய தாமரைச் சேவடித் திருநிழல் சேர்ந்து
துய்ய பேரின்ப வீர்ஞ்சுவை துய்த்து வீற்றிருப்பார்.

என்பதாம்.

இதன் தத்துவமாவது :—

அமாவாசையிலிருந்து சந்திர கலைகள் வளர்ந்து பௌர்ணமியில் பரிபூர்ணமாகின்றன. இங்ஙனம் வளர்ந்துகொண்டு வருவது ஸுஷும்னைக்கு இடதுபுறத்திலுள்ள சந்திர நாடியில் என்று அறிதல் அவசியம். சந்திர கலைகள் பரிபூர்ணமாகுமிடம் ஆக்ஞாஸ்தானமாம். மூலாதாரத்திலிருந்து ஆக்ஞைவரையில்ஸுஷும்னைக்கு இடப்பாகத்திலுள்ள சந்திர நாடியில் இவைமேல்நோக்கிச் செல்லுகின்றன. இதற்கு சுக்லபக்ஷமென்று பெயர். ஆக்ஞையிலிருந்து மூலாதாரம் வரையில் ஸுஷும்னைக்கு வலப்புறத்திலுள்ள சூரிய நாடியில் கீழ் நோக்கிச் செல்லும்போது கிருஷ்ணபக்ஷமென்று பெயர். கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியன்று மூலாதாரத்திற்குச் சற்று மேல் இருக்கும் நாடீகந்தமாகும் ஹாடகேச்சுரத்தில் சுவாஸம் தங்குகின்றது. பிராணாயாமத்தின் அப்பியாஸத்தினால், நாடீகந்தத்தில் சுவாஸத்தை நிறுத்தும் ஆற்றலுடையவர்கள் தங்கள் சுவாஸத்தை ஆங்குள்ள நாகபிலமென்னும் ஸுஷும்னத்துவா

ரத்தின் மூலமாய் ஸுஷும்னையில் ஏற்றி, கிரந்தி (முடிச்சு)ச் சேதனம் செய்து, ஜீவசக்தியாகும் குண்டலியை ஸஹஸ்ராரத்தி லுள்ள பரசிவத்தோடு ஐக்கியம் செய்து, என்றும் நாசமுறாப் பேரின்பமெய்துவர். இது புராணக் கூற்றின் தத்துவமாகும்.

நாகம்:—ஸ்வர்க்கம் அதாவது தானே தானாய் விளங்கும் கேவல நிலை, இந்நிலைக்குச் செல்லும் வாயில்தான் நாகபிலமென்பது. மோக்ஷத்துவாரமென்பதும் இப்பிலமேதான். இந்திர பீடமென்பது ஸஹஸ்ராரமாகும், இந்திரன்—ஆத்மா.

“ஸுஷும்நா கவாடஂ ஸுஷுப்தி மோக்ஷத்வாரஂ விஜெஃயெத்”

என்பதிதற்குப்பிரமாணமாம்.

“நாபீகந்தஂ ஶிவீஜாதஂ தவ ஜாம்பூநத ப்ரபஂ”

என்னும் பிரமாணத்தின்படி நாடீகந்தம் அக்கினிஸ்தானமாகும். இதுதான் தேஜோதண்டமெனப்படும் ஸுஷும்நா நாடியாகும். இது உருக்கிச்சாய்த்த பத்தரைமாற்றுத்தங்கம்போற் பிரகாசிக்கும். ஆதலாற்றான் ஹாடகேச்சுரமெனக்கூறப்படுகின்றது.

“கந்தமத்யெ ஸ்திதா நாடீ ஸுஷும்நெதி ப்ரகீர்த்திதா”
திஷ்டந்தி பரிதஸ்ஸர்வா நாடயோ ஸுஷும்நாஸ்ரித:॥
த்விஸப்ததி ஸஹஸ்ராணி தாஸாஂ ஸ்தூல ப்ரஸாரிணீ:”

என்னும் பிரமாணத்தின்படி நாடீகந்தத்தின் மத்தியிலுள்ளது ஸுஷும்னையென்றும், அந்தநாடீகந்தத்தினின்றும் எழுபத்திராயிரம் நாடிகள் சரீரம்முழுமையும் வியாபித்துள்ளனவென்றும், அவற்றுள் பதினான்குநாடிகள் மிகவும் முக்கியமானவை என்றும் புலனாகின்றன. இந்த எல்லாநாடிகளும் ஜடத்தன்மையோடு கூடியனவாதலின் இவற்றிற்கு அதிஷ்டானமான சேதனம் ஒன்று பற்பலதேவதாஸ்வரூபத்தோடு விளங்குகின்றது.

‘ஸுஷும்நாயா: ஶிவோ தேவ இடாயா தேவதா ஹரி:॥
பிங்கலாயா விரிஞ்சி: ஸ்யாத் ஸரஸ்வத்யா விராண்முநெ॥

என்னும் பிரமாணத்தின்படி ஸுஷும்னைக்குத் தேவதை சிவன், இடைக்கு மஹாவிஷ்ணுவும், பிங்கலைக்கு நான்முகப் பிரஹ்மாவும்; ஸரஸ்வதீ நாடிக்கு விராட் புருஷனும் தேவதைகளாவர். இங்ஙனமே எல்லா நாடிகட்கும் எழுபத்தீராயிரம் தேவதைகளுண்டு. இங்ஙனம் எழுபத்தீராயிரம் நாடிகளும் நாடீகந்தத்தில் ஒன்று சேருவதால் அவற்றிற்கு அதிதேவதைகளும் அங்கே ஒன்றாய்க் கூடுவாரல்லவா? இதைத்தான் புராணம்,

"மதுமை கேள்வன்
புத்திதழ் முளரி மேலோன் புலவர்கோன் புலவரீட்டம்
பைத்தலை யகந்த ஞதிப் பனகர் விஞ் சைய ரியக்கர்,
கின்னரர் கருடர் சித்தர் சாரணர் வசுக்கள் கேடில்
வன்னியே நிருதி காலன் வருணன் கால் வடதிசைக்கோன்
உன்னருஞ் சீர்த்தி யீசன் உருத்திரர் அருவ ரைவர்
பன்னரு மாயுள் வேதர் பலவகை யுடுவி னீட்டம்"
முதலிய தேவகணங்கள்,
அனைவரும் செறிந் தநாதியா யனைய பாதாளத்
தினிது மேவிய வாடக லிங்கமா மூர்த்தி
தனைவி திப்படி முறை முறை யருச்சனை தந்து
கனிவி ருப்பொடு தொழுதனர் போற்றுவர் நாளும்"

என்று கூறுகின்றது. இக்கூற்றை நுட்பமாய்த் துருவி யாராயின், நாடீகந்த ஸ்தானத்தில் ஒன்று கூடும் எழுபத்தீராயிரம் நாடிகளின் அதிதேவதைகள் அங்கே குழுமி, ஹாடகேச்சுரராகும் ஸ்வயம்புலிங்கத்தை வழிபட்டனரென்பதன் தத்துவம் புலப்படாமற் போகாது. இங்ஙனம் வஸுகணங்கள் எட்டு, ருத்திர கணங்கள் பதினொன்று, ஆதித்யகணங்கள் பன்னிரண்டு, அச்வினீ தேவதைகள் இரண்டு ஆக முப்பத்து மூன்று கணங்கள் (கோடி) கூடிய ஸகல தேவதைகளும் நாடீகந்தமாகும் ஹாடகேச்சுரத்தை யாஸ்ரயித்து விளங்குவதால், திருவாரூர்க்குத் தேவாஸ்ரயபுர மெனும் பெயரேற்பட்டது பொருத்தமானதேயாகுமன்றோ?

ஸுஷும்னையே குண்டலினீ சக்தியின் இராஜவீதியாகும். கிருஷ்ணபக்ஷ அமாவாசை மூலாதாரத்திலும், கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி ஹாடகேஶ்வரமாகும் நாடீகந்தத்திலும் ஏற்படுகின்ற தென்பதை யிதுகாறும் விமர்சித்தோம். சித்திரைமாதம் என்பதன் தத்துவத்தையும சுருக்கமாய் ஆராய்வாம்.

> உ◎ஞாயாரம்யதா ப்ராண: ப்ரவிஷ்ட:ஸம்ஸ்தி²தோ ப⁴வேத் ।
> ததா³த்³யம்விஷுவம் ப்ரோக்தம் தாவத்ஸம்வத்ஸரோ ப⁴வேத் ॥
> ப்ராணஸம்ஜ்ஞோ ரவிர் நித்யம் ஸூக்ஷ்மஜ்ஞானம்விஶேஷத: ।
> ததம்த்யம்விஷுவம்ப்ரோக்தம்யாகிநகௌஸ்த்வம்தகை:॥
> (ஸூ, ஸம் ஜ்ஞா ந-கண்-11 அத். 46, 47. ஸ்)

மேற்கூறிய பிரமாணத்தின்படி மூலாதாரத்தில் பிராணனாகும் சூரியன் ஸஞ்சரிக்கும்போது முதலாவதான சித்திரைவிஷு ஏற்படுகின்றது. உத்தராயணத்தின் மத்தியகாலம் சித்திரை விஷுவென்றும், தக்ஷிணாயனத்தின் மத்தியகாலம் அந்தியமாகும் துலா விஷுவென்றும் கூறப்படும். ஆகவே மூலாதார க்ஷேத்திரத்திற்கும் சித்திரைமாதத்திற்கும் நெருங்கிய ஸம்பந்தமிருப்பதால் அதற்கு அதி ஸமீபத்திலுள்ள நாடீகந்தத்திற்கும் சித்திரைமாதம் சிறந்ததாகும்.

இங்ஙனம், அநேகர் சித்திரைமாதம் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியன்று ஹாடகேச்சுரத்தில் மோக்ஷத் துவாரத்தின் மூலமாய் இந்திர பீடமாகும் பிரஹ்மரந்திரத்தை யடைந்து பரசிவத்தின் திருவடி நீழலடைந்தனர். இதனால் இந்திரலோகத்தில் இடமின்மையால் இந்திரன் ஹாடகேச்சுரத்திலுள்ள பாதாள பிலத்தை யடைத்துவிட்டு அதற்குக் குமாரக்கடவுளைக் காவல் புரியும்படி வேண்டிக்கொண்டனர் என்று புராணங் கூறுகின்றது:

அது வருமாறு:

> இன்ன மாண்பு சால் ஆடக விலிங்கமா மூர்த்தி
> தன்னை யோர் முறை தொழுதியா வருநனி சார்ந்து
> பொன்னி நாட்டிட மின்மையால் புலவர்தங் கோமான்
> முன்னை வைகலப் பிலத்தினை மூடுவான் மதித்தான்.

மதித்து மற்றவ னரதன சிருங்கமால் வரையால்
பதத்தின் மேதகு பதந்தரும் பாதல மதனைக்
கதிப்பெருந் திருமுத்தியாங் கடவுண்மா நகரம்
அதற் கணைந்திடு நெறியடைத்தா லென வடைத்தான்.

அடைத்த வவ்வரைமீ மிசை யஞ்சுடர் வடிவேல்
படைக்கலத்தொடு சத்திகள் நால்வரைப் யண்டு
தொடைக் கடம்பணி காளை தாபித்த தொல் காதை
யெடுத்தியம்புவன் கேண்மின்கள் எல்லையில் தவத்தீர்.

ஸுஷும்னாநாடியே குமாரக்கடவுளது சக்திவேல் ஆகும். நாடீகந்தமே வெற்பு (சிறுகுன்று). மூலாதாரபத்மம் நான்கு இதழ்களோடு கூடியது. ஒவ்வோரிதழிலும் ஒவ்வோரக்ஷரமும், அவ்வக்ஷரத்தை முதலாகவுடைய வரதா, ஸ்ரீ, ஷண்டா, ஸரஸ்வதி என்னும் நான்கு சக்திகளுண்டு. ஸுஷும்னாத்துவாரத்தைக் காவல் புரியும் சக்திகள் இவர்களேயாவர் என்று முன்கூறப்பட்டுள்ளது.

சக்திபிலமாகும் குலகுண்டத்தைக் கவாடத்தி (கதவி) னால் மூடி, அதனருகே கிரௌஞ்சபித் என்னும் காரணப்பெயர்பூண்டுள்ள ஞானஸ்கந்தன் தனது சக்திவேலை ஸ்தாபித்து, நான்கு சக்திகளைக்காவல்வைத்தனர் என்றுங்கூறப்பட்டதன்றோ? ஏன் இங்ஙனம் குமாரக்கடவுள் செய்யவேண்டும்? என்னும் சங்கைக்கு ஸமாதானங்கூறப்படுகின்றது.

ஒருகாலத்தில் தாரகன் என்னுமோரசுரன் இந்திரனைப்போரில் வென்று, விண்ணாட்டையபகரித்துக்கொண்டு, அதை அழித்தனன். இந்திரன் அவ்வசுரனின்றும் தப்பித்து விரைந்தோடிக் கைலாசபதியிடம் தனக்குற்ற துன்பத்தைக்கூறி முறையிட்டனன். கைலாஸபதியும் இந்திரன்பால் கருணைகூர்ந்து குமாரக் கடவுளை யனுப்பித் தாரகனைச் சம்மரிக்கும்படி கட்டளையிட்டனர் குமரனும் தாரகனைச் சம்மரித்து பழையபடி இந்திரனுக்கு விண்ணாட்டரசினை யருளிச்செய்தனர். இது புராணக் கூற்று. இதன்தத்துவமாவது :—

தாரகன் மாயையின் புத்திரன்—அவித்தையாகும் பேரிருளையே சரீரமாகக்கொண்டு, அகண்டப்பேரறிவையே ஸ்வரூபமாகவுடைய இந்திரனை ஆவரித்துக்கொண்டு, "இந்திரனுகும் ஆத்மஸ்வரூபமேயில்லை" யென்னும் விபரீதவுணர்ச்சியை யுண்டுபண்ணினுன். க்ரௌஞ்சமென்பது பேரிருண்மலை. ஒவ்வொரு ஜீவனும் ஸுஷுப்தியவஸ்தையில் இந்த அந்தகாரக்குகையில்தான் லயப்படுகின்றனர். ஆதலால் ஸுஷுப்தியவஸ்தையின் அபிமானியாகிய பிராக்ஞனே தாரகாஸுரனுவன். இவன் அக்ஞானத்தின் காரியமாகும் ஜடஸ்வரூப பிராணனை ஹடயோகப்பயிற்சியால் நாடீகந்தத்திலுள்ள பிலத்துவாரத்தின் மூலமாய் ஸஹஸ்ராரமாகும் தேஜோமண்டலத்தை யடைந்து அதைத்தனது ஸாக்ஷிவிருத்தியால் வேருகப்பார்த்தான். பிராக்ஞனே ஸ்வப்நாவஸ்தையில் தைஜஸனென்னும் பெயர்பெற்று ஸாக்ஷிவ்ருத்தியால் கற்பிதஸ்வப்னப் பிரபஞ்சத்தைக் காண்கின்றுன். இங்ஙனம் பார்ப்பது உண்மைஞானமல்ல.

ஜடப்பிரகாசங்களாகிய சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், மின்னல், அக்கினிமுதலியவற்ருல் பிரகாசிக்கப்படாமல், தானேஸ்வயம் பிரகாசமாய்ப் பிரகாசித்துக்கொண்டு இதரஜடவஸ்துக்களையெல்லாம் பிரகாசிப்பிக்கச்செய்யும் சித்சந்திரமண்டலவடிவ இந்த்ரபீடத்தைக் கற்பிதமனோவ்ருத்திக்கு விஷயமான திரிசியப்பொருளாயுணர்வதே அதை நாசம் செய்தான் என்பதன் தத்துவமாம். தேவலோகமாகும் இந்திரபீடமே கைலாஸமாகும். தேஜோமண்டலமென்பதும், சித்சந்திர லோகமென்பதும் அதுவேயாகும். ஸ்வயம்பிரகாசஸ்தானமே தேவலோகமாகும் பொன்நாடு

இங்ஙனம் ஆஸுரப்பிரக்ருதியால் ஜடஸ்வரூபமான பிராணனைப்பிரதானமாய்க்கொண்டுசெய்யும் ஹடயோகஸாதனையால் மனஸ்தத்துவஸ்தானமாகும் ஆக்ஞாசக்கிரத்தைத்தாண்டி ஸஹஸ்ராரத்திற்குச்செல்லக்கூடும்; ஆயினும் அது ஆந்தா திரிசியமாய்க்கருதப்படுதலால், உண்மைஞானமன்று. ஹடயோகிகளுக்கு ஸஹஸ்ராரம் ஆந்தரமாயுள்ள ஒரு தேசவிசேஷமேயாகும், தேசம பரிச்சே

தத்தோடு கூடியதேயாகுமல்லவா? ஆதலினுற்றான் "பொன்னி நாட்டிடமின்மையால்" என்று புராணத்தில் கூறப்பட்டது.

இங்ஙனம் ஹடயோகத்தின் மூலமாய்த் தேவலோகம், ஸ்வர்க்கம், தேஜோமண்டலம், இந்திரபீடம், கைலாஸம், ஜ்யோத்ஸ்ந லோகம் எனப் பலபடியாய்க் கூறப்படும் ஸஹஸ்ராரத்திற்குச் செல்லுதல் கூடாதெனக்கருதியே யப்பிலவாயில் அடைக்கப்பட்டது. அன்றியும்,

"அடைத்த அவ்வரை மீமிசை யஞ்சுடர் வடிவேற்
படைக்க லத்தொடு சத்திகள் நால்வரைப் பண்டு
தொடைக் கடம்பணி காளைதா பித்தனன்"

என்னும் புராணக் கூற்றின்படி, சிவகுருவாயுள்ள ஞானஸ்கந்தர் அகண்டாகாரஞானமாகும் தனது சக்திவேலை, ஸுஷும்னுவாயிலாகும் குலகுண்ட பிலத்தில் ஸ்தாபித்தனர்; ஸ்தாபித்ததுமன்றி நான்கு சக்திகளையும் காவல் வைத்தனரென்றுங் கூறப்பட்டுள்ளது. அச்சக்திகள் யாவரெனின்: மூலாதார பத்மத்தில் உள்ள நான் கிதழ்களில் ஒவ்வொன்றிலும் வ, ஶ, ஷ, ஸ என்னும் அக்ஷரங்களை முதலாகக்கொண்ட வரதா, ஸ்ரீ, ஷண்டா, ஸரஸ்வதி யென்னும் நால்வராவர். இவர்களின் ஸ்வரூபமாவது:—

(1) வரதா=பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை யருள்பவள்.

(2) ஸ்ரீ=மோக்ஷமாகும் நித்தியாநந்தஸ்வரூபிணி.

(3) ஷண்டா=முமுக்ஷுக்களாகிற வண்டுகளுக்கு, அவர்களால் விரும்பப்படும் நித்தியாநந்தமாகும் தேனையருள்பவள்,

(4) ஸரஸ்வதி=காலம், தேசம், வஸ்துவென்னும் திரிவித பரிச்சேதங்களற்ற பூமா ஸ்வரூபிணி.

இத்தகையஸ்வரூபமுடைய நான்கு சக்திகள் ஹாடகேஶ்வரப் பிலவாயிலில் காவல்புரிகின்றனர். இந்த நான்கு சக்திகளை

யும், ஞானசக்தியாகும் சுடர்வேலையும், சித்திரை மாதம் சுக்லபக்ஷ ஷஷ்டியன்று, மன வொருமையோடு தொழுது தியானிக்கின், அவரவர் விரும்பியவெல்லாம் எய்துவர். இவ்விஷயம்,

"மாறில் சித்திரைத் திங்களில் வளர்பிறை மருவு
மாறெ னுந்திதி தன்னிலவ் வேலினை யந்த .
வீறில் சக்திகள் நால்வரைத் தொழுபவர்க் கெண்ணும்
பேற னைத்தும்வந் தெய்தும்நற் பெருந்தவ முனிவீர்" .

என்னும் ஆரூர்த் தலபுராணக் கூற்றினால் ஸித்திக்கின்றது.

ஆகவே, சித்திரை மாதம் சுக்கில பக்ஷ ஷஷ்டி ஹாடகேச்வரத்தில் ஒரு விசேஷ காலமாகும். இது உத்தராயணத்தின் மத்தியிலுள்ளதாகும். ஐப்பசி மாதம் சுக்கில பக்ஷ ஷஷ்டியாகும் ஸ்கந்த ஷஷ்டியைச்சூரஸம்ஹாரஷஷ்டியென்று கூறுவது வழக்கம். இன்றுதான், மாயையின் புத்திரனும், தாரகனது சஹோதரனுமாகிய சூரபத்மன் ஸம்ஹரிக்கப்பட்ட நன்னாள். இது தக்ஷிணாயனத்திலுள்ளது. இதில் மாயாகாரியங்களாகும் ஸகல அநர்த்தங்கள் முற்றும் நாசமாய், உத்தராயணத்தில்சித்திரைமாத சுக்கிலபக்ஷஷஷ்டியன்று நித்தியாநந்த நிலை அடையப்படுகின்றது. அநர்த்தநிவர்த்திக்கும் ஆநந்தப்பிராப்திக்கும் இடையே இவ்வளவு காலம் அபேக்ஷிக்கப்படுதல் அவசியமோ வெனின், வேண்டியதில்லை; அநர்த்தங்கள் ஒழிந்த அந்த க்ஷணத்திலேயே ஆநந்தப்பிராப்தி ஸித்தமாம்; இருள் நீங்குதலும், பிரகாசம் வருதலும் ஒரே காலமாயினும் முன்பின் கிரமத்தை யனுஸரித்துக்காலங் கூறப்பட்டதென்றறிதல் அவசியம். ஒரு க்ஷணத்தில் முற்பாதி தக்ஷிணாயனம், பிற்பாதி உத்தராயணம். ஆதலாற்றான் தக்ஷிணாயனத்தில் அநர்த்தநிவர்த்தியும் உத்தராயணத்தில் ஆநந்தப்பிராப்தியுமாமென்றுகூறப்பட்டது. இத்தகைய யோகரஹஸ்யங்களையெல்லாம் குறிப்பாய் உணர்த்துகின்றது ஹாடகேஶ்வர க்ஷேத்திரம். அன்றியும் கமலாலய க்ஷேத்திரத்தில் மிகச்சிறந்தனவாகக் கூறப்படும் பஞ்சலிங்கங்களுள் ஹாடகேச்சுரமும், வன்மீகேச்சுரமும் சேர்ந்தனவாகும். மற்ற மூன்று லிங்கங்கள் அசலேஶ்வரம், ஆநந்தேஶ்வரம், ஸித்தேஶ்வரம்

என்பனவாகும். இவற்றின் சிறப்புக்களையும் தத்துவத்தையும் அவகாசம் நேர்ந்துழிப்பின்னர் கூறப்படும்.

## ஸ்ரீ தியாகராஜவைபவமும் தத்துவமும்.

### ஸ்ரீ தியாகராஜதியானம்

(க) 𑌨𑌾𑌗𑌰𑌾𑌜 𑌕𑍃𑌤𑌰𑌮𑍍𑌯 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌂
𑌦𑍇𑌵𑌰𑌾𑌜 𑌜𑌲𑌜𑌾𑌕𑍍𑌷𑌵𑌨𑍍𑌦𑌿𑌤𑌂 ।
𑌰𑌾𑌜𑌰𑌾𑌜𑌸𑌖𑌮𑌮𑍍𑌬𑌿𑌕𑌾𑌪𑌤𑌿𑌂
𑌤𑍍𑌯𑌾𑌗𑌰𑌾𑌜𑌮𑌨𑌿𑌶𑌂 𑌭𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

(உ) [illegible]
[illegible] ।
𑌤𑌾𑌟𑌙𑍍𑌕𑌾𑌲𑌙𑍍𑌕𑍃𑌤𑌾𑌸𑍍𑌯𑌂 𑌕𑌨𑌕𑌮𑌣𑌿𑌮𑌹𑌾
𑌭𑌦𑍍𑌰𑌪𑍀𑌠𑍇 𑌨𑌿𑌷𑌣𑍍𑌣𑌮𑍍 ।
[illegible]
[illegible] ।
[illegible]
𑌭𑌾𑌵𑌯𑍇 𑌤𑍍𑌯𑌾𑌗𑌰𑌾𑌜𑌮𑍍 ॥

(இதன் பொருள்) நாகராஜனையே அழகிய குண்டலங்களாக வுடையவரும், தேவராஜனாகிய இந்திரனாலும், கமலக்கண்ணனாகும் மஹாவிஷ்ணுவாலும் போற்றப்படுபவரும், சக்கிரவர்த்தியாகும் முசுகுந்தனுக்கு ஸகாவாயுள்ளவரும், உமாபதியானவருமாகிய ஸ்ரீ தியாகராஜரைச் சதாவணங்குகிறேன்.

2. புஜங்களில் நன்குமலர்ந்த செங்கழுநீர் மாலையை யணிந்தவரும், இரத்தினங்களிழைத்த செம்பொற் சிங்காதனமாகும் பத்திரபீடத்தில் வீற்றிருப்பவரும், தாடங்கங்களால் அலங்கரிக்கப்பட்ட முகமண்டலத்தையுடையவரும், மின்னலைப்போல் பிரகாசிக்கும் பிரபைக்குள் விளங்குபவரும், உவமையற்ற பிரகாசத்தோடு விளங்கும் உமை, ஸ்கந்தன் இவர்களோடு ஆநந்தமாய் இருப்பவரும்

வீரகட்கங்களினால் சோபிப்பவருமான ஸ்ரீ தியாகராஜ மூர்த்தியை ஸதா என்னு ஹ்ருதய குஹையில் பாவிக்கிறேன்.

மூலஸ்தானேஸ்வரரென்னும் வல்மீக நாதரின் ஆலயம் விராட்புருஷனது மூலாதாரமாகவும், ஹாடகேச்சுரமென்பது நாடீகந்தமாகவும் பற்பல பிரமாணங்களைக்கொண்டு ஒருவாறு விமர்சிக்கப்பட்டன. இப்பொழுது, ஸ்ரீ தியாகராஜரது வரலாறு கூறப்படுகின்றது.

ஒரு காலத்தில் மஹாவிஷ்ணுவானவர் பரமசிவத்தைக் குறித்துத் தனக்கு ஒரு மகன் வேண்டுமென்று தவஞ்செய்தனர்.

பரமசிவன், மஹாவிஷ்ணுவின் மாதவத்திற்கு மகிழ்ந்து மாதடிந்தானொடு மால்விடையேறி மாதவள் தன்னொடு தோன்றினன். இங்ஙனம், பரமசிவன் ஸோமாஸ்கந்த ஸ்வரூபத்தோடு பிரத்தியக்ஷமானதும், கேசவன்,

"ஆதியீசனைப் போற்றி னனவன்
பாதி மேனியைப் பகிர்ந்து கொண்டதோர்
மாது சேவடி வணங்கல் செய்திலன்".

ஆயினும், பரமசிவன் ஸ்ரீதானுக்குப் புத்திரப்பேறுண்டாகும்படி வரந்தந்தருளினன். அப்பொழுது உமாதேவி, திருமாலை நோக்கிக் கோபத்தோடு "மாதவ! என்னை நீ வணங்காத பாவத்தினால், நினக்குண்டாகப்போகும் மகன் பொன்றுவானாக" என்று சாபமிட்டனள். உடனே, அச்சுதன், அம்பிகையின் சரணங்களில் வீழ்ந்து வணங்கி, மனங்கலங்கி, இன்னது செய்வதென்பது தோன்றாது, தான் செய்த பெரும்பிழை நீங்குமாறு, ஒரு செம்பொன் ஆஸனத்தில், ஸோமாஸ்கந்த மூர்த்தியை யாகம விதிப்படி ஸ்தாபித்துத் திரிகரணத் தூய்மையுடன் வெகுகாலம் ஆராதித்து வந்தனன். இங்ஙனம், திருமால் உபாஸித்துவருங்கால், ஒருநாள், பரமசிவன், மறுபடியும் ஸோமாஸ்கந்த வடிவத்தோடு பிரத்தியக்ஷமானன். உடனே, திருமால், முதலில் பராசக்தியாகும் உமையையும், ஸ்கந்தனையும் வணங்கிப் பின்னர், பரமசிவத்தைப் பணிந்து தோத்தரித்

தனன். இங்ஙனம் சங்கரி சங்கரனைப் பணிந்தபின்னர், சங்கரியை நோக்கி "ஆழ்ந்த கடற்புவிக்கோசன்னையே! அறத்தினருட்செல்வி! சூழ்ந்து வழுத்தியயோகர் மனத்திடை தொல்லூழி வாழ்ந்த விளக் கொளியே!!!" அடியேன்.

வண்ண வருக்க னனற்கதிர் மாமலர் வாசம் போல்
அண்ணலு நீயுமமர்ந்ததொர் தன்மை யினையன் தாள்!
உண்ணிறை யன்பின் வணங்கிய தன்றி யுளத் துன்னே
யெண்ணில ஞகி யிகழ்ந்திலன் ஏழுல கீன்றுள்ளாய்!
தந்தருள் செய்ததொர் சந்ததி யூறுதணந்தாவி
யுய்ந்திட நீயருள் செய்தி யெனத்தொழு தோசாழி
நந்துட னேந்திய நாரணன் வேண்டலும் ஞாலத்தோ
டந்தமில் பேரற முந்தருள் செய்தவ ளருள்செய்வாள்.
"யானுரைத்த தோர் சாபம தீறுறு து
ஆனிடத் திலேந்தாடு மெய் மண்ணல்தன்
தீறுதற் கட்படையின் னின்செம்மல்தான்
ஊனமுற் றுயிர் உய்குவன் உண்மையால்"

என்றனள். உடனே திருமால், மிகவும் ஸந்தோஷமடைந்து, சங்கரனைப்பார்த்து,

"எந்தை! அருச்சனை நாளுமிழைத்தியான்
உய்ந்திடத் திருவுள்ள முவந்துமை
கந்தன் மற்றி வரோடு கலந்து நீ
யிந்தமுப் படிவத்தி லிருத்தியால்"

என்று வேண்டிக்கொண்டனர், திருமாலின் வேண்டுகோளுக் கிரங்கிப் பரமசிவம்,

....................உலகத்தில் எண்ணி லாப்பதி தம்முள்
அனக மாபார சக்திதன் திருநக ரதிகமென் பது தேறப்
புனித நாயகி கந்தனே டெந்தையப் பொலஞ் சுடர்
வடிவம் சேர்ந்து

இனிது மேவிவீற் றிருந்தனன் கயிலையி னிடத்துவீற்
றிருந் தென்ன

என்னும் திருவாரூர்ப் புராணப்பாசுரத்தின்படி, மஹாவிஷ்ணுவால் கற்பிக்கப்பட்ட ஸோமாஸ்கந்தஸ்வரூபத்தில் நித்திய ஸாந்நித்திய மடைந்து வீற்றிருந்தனன்.

இதில் ஒரு ரஹஸ்யம் வெளியாகின்றது. அஃதியாதெனின், "உலகத்தில் சிவஸ்தலங்கள் கணக்கற்றனவாயிருந்தாலும், அவை யாவற்றுள்ளும் பராசக்தி பீடமாகிய கமலாலய மென்னும் திருவாரூரே மிகச்சிறந்ததாமென்பது உலகத்தோர் நன்கறிந்து தெளியும் பொருட்டுப் பரமசிவன் அந்த ஸோமாஸ்கந்த மூர்த்தத்தில் ஸாந்நியமடைந்தனர்" என்றுகூறியதனால், மஹாவிஷ்ணுவால் கற்பிக்கப்பட்ட செம்பொற் சிங்காதன ஸோமாஸ்கந்த மூர்த்தத்தில் பரமசிவம் ஸாந்நித்தியமாகும்போதே, அம்மூர்த்தி திருவாரூர் என்னும் பராசக்தி பீடத்தில், பின்னர், பிரதிஷ்டிக்கப்படப்போவது ஸூசிப்பிக்கப்படுவது நுட்பமாய் அறியத்தக்கது.

பின்னர், திருமால், அம்மூர்த்தியை நாள்தோறும் பூசித்துக் கொண்டு தனது நெஞ்சமாகும் கோயிலில் வைத்துக் கொண்டு திருப்பாற்கடலில் நாகணையில் துயின்றனன்.

இங்ஙனம் யோக நித்திரையிலுள்ள மஹாவிஷ்ணுவின் நெட்டுயிர்ப்பின் அசைவால் திருமாலின் ஹ்ருதயத்தின்கண், அம்ருத சந்திர சூடனுகும் ஸோமாஸ்கந்தர் அசைந்தாடிக்கொண்டு அமர்ந்திருந்தனன்.

ஒரு ஜீவனது சரீரத்தில் பிராணபானுதிகளால் ஏற்படும் உச்வாஸ நிச்வாஸாதிகளால் "ஹம்ஸ: ஸோஹம்" என்னும் மஹாவாக்கிய மந்த்ரம் ஜபிக்காமலே ஜபிக்கப்பட்டு வருகின்றது. மூச்சை வெளியே விடுவதனுலும், உள்ளுக்கிழுப்பதனுலும் ஏற்படும் அசைவே "அஜபா" நடனமாகும். இந்த நடனத்தில்

ஹம்ஸா: ஸோஹம்'' என்னும் மஹாமந்த்ரம், உச்வாஸ நிச்வாஸங்களோடு அநுசரித்துக்கொண்டு உச்சரிக்கப்படாமலே உரைக்கப்படுகின்றது.

இங்ஙனம், மஹாவிஷ்ணுவானவர் க்ஷீராப்தியில் ஆயிரம் பணாமுடிகள் கொண்ட சேஷபர்யங்கத்தின்மேல் சயனித்துக்கொண்டு யோகநித்திரை புரியும்போது, அவருடைய ஹ்ருதயமாகும் அநாஹத சக்கிரத்தில் அமர்ந்து, ஸோமாஸ்கந்த மூர்த்தியாகும் ஸ்ரீதியாகராஜப்பெருமான் அசைந்தாடிக்கொண்டு எல்லாவுலகங்களையும் உய்விக்கின்றனன். இவ்விஷயம்,

மேகமொன்று நீள் வெள்ளி வெற்பணைந்தென
விளங்கு நாகணை மேவி
யோக நற்றுயில் கொண்டுறை கடவுள் கெட்
டுயிர்ப் பசைவா லன்னான்
ஆகமீ தசைந்தாடியே யமர்ந்தனன்
அமுத சந்திர மௌலி
யேக நாயகன் அம்பிகை கந்தனோ
டெண்ணி லாவுல குய்ய

என்னும் ஆரூர்ப்புராணவசனத்தால் அறியக்கிடக்கின்றது.

தேச, கால. வஸ்து பரிச்சேதமின்றி, எங்கும் வியாபகமாயும், அதனால் நிச்சலமாயுமுள்ள பரமசிவம், அருட்சக்தியின் வியாபகத்தினால் அசைகின்றது. இந்த அசைவிற்கு அருள் நடனம் அல்லது ஆநந்த தாண்டவம் என்று பெயர்.

இதனையே, பெரியோர் அஜபா நடனமென்றுங் கூறுவர். காரணேச்வரனது சிருஷ்டி, ஸ்திதி முதலிய பஞ்சகிருத்தியங்களும் இந்த அஜபா நடனத்தில் அடங்கியனவேயாகும்.

மஹாவிஷ்ணுவின் பிராணாபாநதிகளால் ஏற்படும் உச்வாஸ நிச்வாஸ வடிவ "அஜபை" சித்சக்தியின் வியாபகத்தால், மூலாதாரத்திற்குமேல், பராஸ்தானத்தில் உண்டாகின்றது. இந்த

அஜபா நடனத்தில் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அநுக்கிரஹம் என்னும் பஞ்சகிருத்தியங்களுமடங்கியவை யாதலின், அவ்வத்தொழிலுக்கிணங்கச் சித்சக்தியே ஐந்துவகையாகப் பிரியும் என்பது வேதாகமங்களின் துணிபாகும். பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி யென்பவை பஞ்ச சக்திகளாகும்.

இவற்றின் விமர்சமாவது :—

1. பராசக்தி: இதுபரமசிவம்போல் எங்கும் வியாபித்துப் பக்குவமான ஜீவ கோடிகளுக்கு அநுக்கிரஹம் செய்வதாம். இதுவே, அநுக்கிரஹ கிருத்தியம் செய்யும் அருட்சக்தியாகும். இது சக்திபாத காலத்தில் உணரப்படுவதாகும்.

2. ஆதிசக்தி. இது திரோதன சக்தியாகும். இது, தன்ஸ்வரூபத்தைமறைப்பதாம். இது ஆன்மாக்களுக்குள்ள ஆணவமலம் பக்குவமாகும்படி போகத்தைக் கொடுப்பதாகும்.

3. இச்சா சக்தி. இதுவே ஸம்ஹாரசக்தியாகும். இது, உயிர்களுக்கு மலத்தை நீக்கிச் சிவானுபவம் தரும்பொருட்டு ஏற்படுவதாகும். இதுவும்கருணை வடிவமேயாகும்.

4. ஞான சக்தி. இது திதித்தொழிலைச்செய்யும் சக்தியாம். உயிர்களின் மலத்தை நீக்கி அவர்கள் சிவாநுபவம் பெறும்பொருட்டுச் செய்யவேண்டிய உபாயங்களையுணர்த்துவது இதுவாகும்.

5. கிரியாசக்தி: இது கர்மத்துக்கீடாக ஆன்மாக்களுக்குத் தனு, கரண, புவன, போகாதிகளையுண்டாக்கும் சக்தியாம்.

பரமசிவம், மேற்கூறிய பஞ்ச கிருத்தியங்களையும், திருவருளின் விளையாட்டாகவும், ஜீவான்மாக்களின் துன்பகாரணமான ஜனன மரண ஸம்ஸாரத்தினின்றும் அவர்களைக் காத்து அருள் புரிவதற்காகவும் செய்கின்றனர். எங்ஙனமெனின், அழித்தல், ஆன்மாக்களின் இளைப்பை யொழிப்பதற்கும், படைத்தல், மலபரிபாகம் வருவித்தற் பொருட்டும், காத்தல், இருவினைப் போகங்களை யுண்பித்து, அவற்றை ஒழித்தற்பொருட்டும், மறைத்தல், அவ்வினைப்போகங்களில் உயிர்கள் அழுந்துதற்பொருட்டும், அருளல், மலத்தை நீக்கி உயிர்கட்கு அத்வைத ஞானத்தை அளித்தற் பொருட்டும் ஆம். ஆதலின், அருளைப்போலவே மற்றைய தொழில்களும் அருளுக்குத்துணையாயுள்ளமையால் அருட்டொழில்களேயாமெனக் கூறத்தகும்.

இங்ஙனம் பஞ்சகிருத்திய தத்துவத்தைத் தாத்பரியமாய்க் கொண்ட அஜபாஸ்வரூபத்தை ஒவ்வொருவரும், ஸத்குருவின் மூலமாய் உணர்ந்து, ஒவ்வொரு நாளும், தாம் சுவாஸிக்கும் 21,600 சுவாஸங்களில், அஜபையாய் ஜபிக்கப்படும் ஹ°ஸ: ஸோஹ° என்னும் மஹா மந்த்ரங்களை அர்த்தத்தோடு அநுஸந்தானம் செய்து, ஊக்கண்ணால் ஸ்ரீதியாகேசனது அஜபா நடனத்தைத் தரிசிக்கின், சிந்தையும் மொழியும் செல்லாச் சிவஸ்வரூபமே யாவரென்பது திண்ணம். ஆதலின், அஜபாஸ்வரூபத்தையும், குருதியானம், பஞ்சபூஜை, சித்சக்தி விமாசம், ஸகுண நிர்க்குணத் தியான விவரங்கள், அஜபையின் மஹிமை, அஜபாகாயத்திரீ மந்த்ர ஜப விவரம், பரமஹம்ஸதியானம், பிரதி ஜீவனும் ஒவ்வொரு நாளும் இபற்றும் 21.600 அஜபைகளைக் கணபதிக்கு 600, பிரஹ்மாவுக்கு 6.000, விஷ்ணுவுக்கு 6,000, சிவனுக்கு 6,000, ஜீவாத்மாவுக்கு 1,000, பரமாத்மாவுக்கு 1.000, குருவுக்கு 1,000 வீதம் நிவேதனம் செய்யும் விவரம், அந்த அந்த தேவதைகளின் தியானம், அவரவர் விளங்கும் மூலாதாராதி ஷட்சக்கிரங்களின் ஸ்வரூபம், அக்ஷரங்கள், யோகினிகள். சிரஸில் ஸஹஸ்ராரத்தில் விளங்கும் குரு பீடமாகிய அஜபா சக்கிர ஸ்வரூபம் முதலிய பற்பல ரஹஸ்யங்களை யுள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்கும்

அஜபாகல்பம் என்னும் ஒரு சிறு நூல், பற்பல எட்டுப்பிரதிகளைக் கொண்டு ஆராய்ந்து தொகுத்துத் தனியே அச்சிடப்பட்டுள்ளது. அதனை ஸத்குருபால் கிரமமாய் விதிப்படியே யோகியுணர்ங்கால், அஜபாஸ்வரூபத்தையுணரலாம்; அறம்பாவமென்னும் இருவினைக்கட்டினின்றும் விடுபடலாம்; அஜபா நடனத்தைத் தரிசிக்கலாம்; செம்பொருளை யுணரலாம்; சிந்தையும் மொழியும் செல்லாச்சிவ வடிவமாகலாம்.

இங்ஙனம், மஹாவிஷ்ணுவின் உபாஸ்ய ஸ்வரூபமாகிய ஸ்ரீ ஸோமாஸ்கந்த தியாகேசன், அவரது ஹ்ருதயத்தில், தஹராகாசத்தில், ஹம்ஸவடிவ அஜபைகளின் அசைவால் ஆடிக்கொண்டு விளங்குங்காலத்தில், தேவலோகத்தில் இந்திரனுக்கு அஸுரர்களால் துன்பம் ஏற்பட்டது.

உடனே, அமரேசன், திருப்பாற்கடலையணுகி, நீலமேகவண்ணனைப் பணிந்து, தனக்குற்ற துன்பத்தைத் தெரிவித்துக் கொண்டனன், அப்பொழுது திருமால், இந்திரனை நோக்கித் தன்னுடைய உபாஸ்யஸ்வரூபத்தைக்காட்டி,

அறந்தரும் உமையொடு மலர் கடம்பொடு
நறுங்குழ வணிந்தவேல் நம்பிதன்னொடும்
உறைந்த வெம் ஆவியாம் ஒப்பிலாத விச்
சிறந்தமா மூர்த்தியைப் பூசை செய்திடில்;

தீக்கொடுந் தொழிலுறுத் திருகு வெம்பகை
மாக்கடுஞ் சினமூது வலிய தானவர்
ஆக்கமும் உங்கள்பால் அடைந்து நின்றதோர்
ஏக்கமும் கதிரெதிர் இருளின் நீங்குமால்.

என்று திருவாய் மலர்ந்து, உமையொடும், இளையசேயொடும் கனக சிங்காதனத்துறைந்தொளிருங் கண்ணுதலை யவனுக்கு இனிதளித்தனன்.

இந்திரனும் அம்மூர்த்தியைத் திருமாலினிடம் பெற்றுக் கொண்டு, விண்ணாட்டையடைந்து, விதிப்படி பூசித்து, அஸுரவாதையினின்றும் நீங்கினன். பின்னர், ஒரு ஸமயம் வலாஸுரனென்னும் ஓர் அஸுரன் வானவர் நாட்டினை முற்றுகையிட்டு, இந்திரனோடு பொருதவந்தனன்.

இந்திரன், அவ் வலாஸுரனோடு போர் புரிய முடியாமல் புறங்கொடுத்தோடித் தனது உபாஸனா மூர்த்தியாகும் ஸோமாஸ்கந்த தியாகேசனிடம் முறையிட்டனன்.

உடனே, "யுமையொடும் குமரனோடும் மடங்கலந்தவசில் வைகும் மஹேசன்" ஓ தேவராஜனே! நீ பூலோகம் சென்று எனது பேரன்பிற்குரிய முசுகுந்த சக்கிரவர்த்தியை நினக்குதவியாக அழைத்துவரின் நினக்கு வெற்றியுண்டாகும்" என்று திருவாய் மலர்ந்தருளினன்.

குறிப்பு:—இந்த முசுகுந்தன், முற்பிறப்பில் கைலாயத்தில் ஒரு முசு (குரங்கு) ஆகவிருந்து, ஒரு நாள் ஒரு வில்வமரத்தடியில் சிவனும், சிவையும் அமர்ந்திருக்கும்போது, அவ்வில்வ பத்ரங்களைப் பறித்து அவர்மேல் எறிந்தது. பரமேஸ்வரன் அம்முசு செய்த காரியத்திற் (வில்வார்ச்சனைக்) குச் சந்தோஷித்து "வில்லுவத்தின், தளிர்கொடுமை நீயருச்சனை புரிந்த தன்மையால் மனுகுலத்தினிலுதித்து, வளைக்க நீ நுலகாளுதி" என்று திருவாய் மலர்ந்தருளினன். ஸஜ்ஞாநாத் அஜ்ஞாநதோ வாபி க்ருதம் த்வைவிஜ்ஞாநவத் ப்ரவர்த்தகம் என்னும் பிரமாணத்தின்படி கயிலையிலிருந்த ஒருகுரங்கு அபுத்திபூர்வகமாய்ச்செய்த ஒருகாரியமும், சிவனருளால் சிவபுண்ணியமாய் மாறி அதன்பயனாய்ப்பூலோகத்தில் மனுகுலத்தில் ஒருசக்கிரவர்த்தியாய்ப் பிறந்ததெனின், சிவாநுக்கிரஹத்தின் மஹிமையை யென்னென்று கூறமுடியும்?

நிற்க, இந்திரனும், பூலோகத்தில் ஏகசக்ராதிபத்திய செங்கோலோச்சும் முசுகுந்தசக்கிரவர்த்தியை தேவலோகத்திற்கு வரும்படி வேண்டிக்கொண்டு, அவருதவியால், வலாசுரனைவென்று வாகைசூடினன், பின்னர், தேவராஜன் புவிராஜனுக்கு வேண்டிய

உபசாரங்களைச்செய்து, முசமன் கூறித்தியாகேசனது பூசைக்குத் தொடங்கினன். அப்பொழுது இறைவன், இந்திரனுணராதபடி,

அரிய மாமணித் தெய்வவா டகத்திரு மேனிக்
கிரண மூதண்ட கோளகை கடந்துமேற் கிளரப்
பிரம ஞகியா முயிர்த்தொகை முழுவதுாவும் பெற்ற
உரிய கன்னிதன் சேயோடு மருங்கினிதுறைய,

முதிய பல்கண நாதர்கள் மொய்க்கனர் சூழ
வெதிரி லாததோர் கயிலையில் இருக்குமா போலக்
கதிர் செய் மாமணிக் கனகசிங் காதனத்திடையே
விதியு மாயனுந் தேடுதற் கரியதோர் விமலன்,

இனிது வீற்றிருந் திந்திரன் தெரிந்திடா வண்ணம்
அனக மன்னவன் தெரிந்திடக் காட்சியாங் களித்துப்
புனித நல்லருள் புரிந்தனன் புரிதலும் முன்னை
நினைவு யாவையு முணர்ந்தனன் நிருபர்தம் பெருமான்.

முசுகுந்த சக்கிரவர்த்தி இறைவன் அருளிய காட்சியைக் கண்டதும், தனது முற்பிறவியின் உணர்வை யடைந்து; பரமசிவனைப் பலவாறு துதித்துநிற்கையில் கருணாநிதியாகிய அஜபா நடனத் தியாகேசன்,

வாசவன் கேளா வண்ணம் மன்னவன் தன்னை நோக்கித்
தேசுறு செல்வ வாரூர்த் திருநகர் கொடுபோய் எம்மைப்
பூசனை புரிதி யென்றான் புகழ்மறை தந்த வாயால்
ஈசனெம் பெருமான் ஞாலத் தெண்ணிலா வுயிர்களுய்ய

அம்புவி யரசற் கிவ்வா றருள்செய்து முன்போலந்தப்
பைம்பொனந் தெய்வச் சோதிப் படிவத்திற் கரந்து
றைந்தான்
உம்பர்கோ னறியா வண்ணம் உமையொடும்
குமரனோடும்
எம்பிரா னவன்செய் மாயம் யாவரே யறியு நீரார்.

இங்ஙனம், தியாகேசன் திருவாய் மலர்ந்தருளியதைச் செவி மடுத்து இந்திரனை நோக்கி, ஹே தேவராஜனே!

ஐய! நீ பூசையாற்றும் அமலனைத் தருதி யென்னத்
துய்யசீர் மகவான் வாசத் தொடைத்துழாய் முகுந்தன் பூசை
செய்துள மூர்த்தி யிந்தத் தெய்வமா மூர்த்தி யன்னான்
மெய்யுரை யிசைவு பெற்றால் தருகுவன் வேந்த வென்றான்.

உடனே, முசுகுந்தசக்கரவர்த்தி திருப்பாற்கடலையடைந்து, முகுந்தனைத் தரிசித்து, இந்திரனது கூற்றை விண்ணப்பித்து, மஹா விஷ்ணுவின் இசைவு பெற்றுத்திரும்பினான். அதற்குள் வாசவன் தான் உபாசிக்கும் தியாகேசனது வடிவத்தைப் போல ஆறுமூர்த்திகளைத் தெய்வச் சிற்பியால் நிர்மிக்கச் செய்து, அவற்றையெல்லாம் சக்கிரவர்த்தியின் முன்னர் வைத்துக்காட்டி, இவற்றுள் ஒரு மூர்த்தியை யெடுத்துக்கொள்ளும்படி இயம்பினான். முசுகுந்தனும் அவ்வேழுமூர்த்திகளையும் ஸ்தூலக்கண்களால் தரிசித்து அவையொன்றுக்கொன்று தினையளவும் வேறுபடாமல், அபேதமாய் இருப்பதை யுணர்ந்து,

சிவனரு ளதனால் தேவர்கோன் செய்கை
தெரிந்துசெங் கோலுடைச்செம்மல்
இவரல ரென்ன நாரணன் மார்பில்
இனிதசைந் தாடிவீற் றிருந்த
உவமைதீர் சுருதி யடவகிண் கிணிக்கால்
ஒருதிரு மூர்த்தியைக்காட்ட,

உடனே, வாசவன், இஃதிறைவன் திருவருளென வுணர்ந்து, முகுந்தன் தனக்கருளிய மூலத்தியாகேசனையும், மற்றைய ஆறு மூர்த்திகளையும் அம் மன்னவற்கே யழித்துப் பூலோகத்திற்கு அனுப்பிவிட்டனன்.

முசுகுந்தனும் தெய்வலோகத்தினின்றுங் கொணர்ந்த அவ் வேழு மூர்த்திகளில் மூலத்தியாகேசரைத் திருவாரூரிலும்,

மற்றைய ஆறுமூர்த்திகளைத் திருநாகை, திருக்கோளிலி, திருமறைக்காடு, திருநள்ளாறு, திருப்புரிசை, திருவாய்மூர் என்னும் ஆறு திருப்பதிகளிலும் விதிப்படி ஸ்தாபித்தனன்.

இதகாறும் ஸ்ரீ தியாகராஜரைப்பற்றிப் புராணங் கூறும் வண்ணம் ஸ்தூலமான வரலாறு கூறப்பட்டது.

இனி ஸ்ரீ தியாகராஜரைப்பற்றிய ஸூக்ஷ்ம தத்துவத்தை விமர்சிப்போம். திருமாலுக்கு நிஷ்கள பரசிவம் பிரத்தியக்ஷமானது ஸோமாஸ்கந்த வடிவமாகுமென்பது முன் கூறப்பட்டது.

சுஹ்ருதி-ஜ்தாநய-ஹிதாஹிஸார்யிம்மாத்
ஸர்ய-ம்மிரீஜ்ஸ-தயாஅஷ்டாநநெர்ந।
கவ-ரூமெவகநீய வ-ஸ்-ஹ்ஸி
ஸளமமயிகஸ்ரமஹவத்-ரதொஉஸ்யும்ஹ-: ॥

(இ—ள்) மதுஸூதனன் அர்ச்சித்ததும், பனியைப்போல் தவளமானதுமான கற்பூரலிங்கத்தினின்றும் உமையோடும் ஸ்கந்தனோடும் பச்சைக்கற்பூரப்பூச்சோடும், திருமாலின் முன்னர் பரமேஸ்வரன் ஆவிர்ப்பவித்தனன். இங்ஙனம் நிர்க்குண பரசிவம் ஸகுணரூபத்தோடு ஆவிர்ப்பவிப்பது அன்பர்களின் தியானம் அர்ச்சனைமுதலியவற்றை யங்கீகரித்து, அவர்கட்கு அருள்புரிவதற்கேயாகும். அன்றியும்,

ஸொராக்ஸம்ஜம் ஹாஜெவம் குவிஹ-ஹயாமு்தஃ ஷிதம் ।
கவ-ஹநாமெவகஹாரவாஸநாம்தீதிஜ-வம் ॥
தத்வகாம்அநஸஹாய ஸ-ந்த ஜடாயரம் ।
ரணாஸயவஸாம்தவீம்ளஸளஆம்ரூஉவீம்கழாழ ॥
ஙிஹ்ராணரூகெஆர-ரமநாஹிவிபெஷகம் ।
ஸ-ரஜவம்திகாவ-ஷ்கணாஹரணஹாஸ-ரம் ॥
காஶீரஜாததிகூஹாஸ்வஹிவிமொஅநம் ।
வரஶ்வயஶ்ரமாஉஹீதிவர-ரூாஷ-ரக்தரம் ॥

𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌾𑌗𑍍𑌰𑌵𑌸𑍀𑌯𑌾𑌨𑌂𑌗𑌣𑌿𑌨𑍀𑌵𑌰𑌲𑌂𑌬𑌿𑌤𑌂 ।
𑌹𑌸𑍍𑌤𑌾𑌬𑍍𑌜𑌪𑍃𑌷𑍍𑌠𑌶𑌾𑌵𑌕𑌿𑌙𑍍𑌕𑌿𑌣𑍀𑌵𑌰𑌭𑍂𑌷𑌿𑌤𑌂 ॥
𑌸𑌂𑌸𑌾𑌰𑌘𑍋𑌰𑌭𑍈𑌷𑌜𑍍𑌯𑌵𑌶𑌾𑌮𑌹𑍍𑌯𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌵𑍈𑌭𑌵𑌂 ॥
𑌰𑌤𑍍𑌨𑌸𑌿𑌂𑌹𑌾𑌸𑌨𑌾𑌸𑍀𑌨𑌂 𑌰𑌮𑌣𑍀𑌯𑌤𑌰𑌾𑌕𑍃𑌤𑌿𑌂 ।
𑌵𑌸𑌂𑌤𑍀𑌂 𑌵𑌾𑌮𑌭𑌾𑌗𑍇𑌽𑌸𑍍𑌯 𑌵𑌾𑌰𑌿𑌜𑌾𑌯𑌤𑌲𑍋𑌚𑌨𑌾𑌂 ।
𑌪𑌰𑍍𑌵𑌤𑌰𑌾𑌜𑌸𑍁𑌤𑌾𑌂 𑌦𑍇𑌵𑍀𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌷𑌣𑌭𑍂𑌷𑌿𑌤𑌾𑌂 ॥
𑌶𑌿𑌵𑌂 𑌤𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑌗𑌤𑌂 𑌕𑍋𑌮𑌲𑌾𑌕𑍃𑌤𑌿𑌂
𑌮𑌞𑍍𑌜𑍀𑌰𑌕𑌿𑌙𑍍𑌕𑌿𑌣𑍀𑌕𑌾𑌞𑍍𑌚𑍀 𑌕𑍇𑌯𑍂𑌰𑌕𑌟𑌕𑌾𑌙𑍍𑌗𑌦𑍈𑌃 ।
𑌶𑍁𑌭𑍍𑌰𑍈𑌃 𑌕𑌾𑌨𑍍𑌤𑍈𑌃 𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌵𑌾𑌮𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌂 ॥

என்று சிவபக்தவிலாஸம் 9-வது அத்தியாயத்தில் மஹா விஷ்ணுவுக்கு நிஷ்கள பரசிவம் பிரத்தியக்ஷமான ஸ்வரூபம் வர்ணிக்கப்படுகின்றது.

பச்சைக்கற்பூரப்பூச்சும், செங்கழுநீர்புஷ்பத்தின் வாஸனையும், நான்கு திக்குகளிலும் வீசப் பொன்னிறமான சிறந்தசடைகளையுடையவராய்த் தாமரை நூல்போல் மெல்லிய சரீரத்தோடு, சிரஸில் சந்திரகலையைத்தரித்தவராய், நெற்றியில் கஸ்தூரிப்பொட்டோடும் காதுகளில் பிரகாசிக்கும்படியான ஜவந்தீ புஷ்பத்தோடும், குங்குமப்பூவின் திலகம் போன்ற அழற்கண்ணோடும் தனது நான்குகரங்களில் கோடரி, மான், அபயம், வரதம் இவைகளைத்தரித்தவராய்ப் புலித்தோல் அணிந்து, பக்தர்களுக்கு அபயம் கூறும் பாதச்சிலம்புகளின் மணிகள் ஒலிக்க, ஸம்ஸாரமாகிய பெருநோய்க்குச் சிறந்த ஔஷதமாகும் சரணதூளியின் வைபவத்தோடும்கூடிய மிகவும் அழகிய உருவத்தோடு ரத்தினஸிம்ஹாஸனத்தின்மேல் வீற்றிருந்து தனது வாமபாகத்தில் ஸர்வாலங்கார பூஷிதையாய்த் தாமரை மலர் போன்ற நேத்திரங்களையுடைய பர்வதராஜகுமாரியாகும் பராதேவதையோடும், சிவம், சிவை இவ்விருவருக்கும் இடையே மிகவும் அழகிய வடிவத்தோடு, அரைஞாண் காப்பு, சலங்கைகள் முதலிய பல அணிகள் பூண்டு விளை

யாடிக்கொண்டிருக்கும் ஸ்கந்தப்பெருமானேடும் பிரத்தியக்ஷமானூர். திருமால் இக்காட்சியைக் கண்டு பரவசமெய்தி ஆனந்தக்கண்ணீர் சொரிய அடியற்ற மரம் போல் கீழேவிழுந்து ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தனர்.

இங்ஙனம், முசுகுந்தனுக்குத் தரிசனம் தந்த மூர்த்தமாகும் ஸோமாஸ்கந்த ஸ்வரூபமே ஸ்ரீ தியாகராஜமூர்த்தியாகும் என்பது, திருமால் தமது ஹ்ருதயத்தில் வைத்து உபாஸித்து வந்ததனாலும், அதே மூர்த்தியை அவர் இந்திரனுக்கு அருளியதனாலும், பின்னர், இந்திரன் முசுகுந்த சக்கரவர்த்திக்கு அருளியதாலும் ஏற்படுகின்றதன்றோ?

இதர ஆலயங்களிலுள்ள ஸோமாஸ்கந்தமூர்த்திக்கும் ஸ்ரீ தியாகராஜப்பெருமானுக்கும் உள்ள சிறப்புலக்ஷணங்கள் எவையெனின், செங்கழுநீர்மாலை, பச்சைக்கற்பூர லேபனம் (பூச்சு), ஜடையில் சந்திரகலை, ஜவந்திபுஷ்பத்தாலாய கர்ணத்தோடு (காதணி) முதலியவைகளே யாகும். இவ்விஷயம் இந்திரன் முசுகுந்த சக்கிரவர்த்திக்குத்தியாகேசனைத் தந்தருளிப் பூலோகத்திற்கு அனுப்பும் போது சொல்லியனுப்பிய வாக்கியத்தால் அறியக்கிடக்கின்றது. அஃதாவது:—

[illegible] ।
ரத்நஸிம்ஹாஸநாரூடம் [illegible] ॥
[illegible] ।
கஹ்லாரமாலாம் [illegible] ॥
[illegible]

என்னும் பிரமாணத்தின்படி, ரத்தின ஸிம்ஹாஸனம், அக்கினிச்சத்திரம், வலம்புரிச்சங்க (நாதம்), ஜவந்தீ புஷ்பத்தோடு, (காதணி) செங்கழுநீர் புஷ்பமாலை பச்சைக்கற்பூரப்பூச்சு இவைகள் பிரதிதினம் தியாகேசனுக்கு நியமமாக வேண்டற்பாலன வென்றுகூறினூன். ஆகவே இவைகளே சிறப்பு லக்ஷணங்களாகும்.

இங்ஙனம் கூறப்பட்ட சிறந்த திரவியங்களில்லாமல் தியாகராஜப்பெருமானுக்கு நித்தியாராதனம் நடைபெறக்கூடாதென்று இந்திரன் முசுகுந்த சக்கிரவர்த்திக்குக் கட்டளையிட்டனுப்பினன் என்று முன் கூறப்பட்டது.

ஆகலின், இதர சிவாலயங்களில் உள்ள ஸோமாஸ்கந்த மூர்த்தங்களுக்கும், திருவாரூரில் நித்திய ஸாந்நித்தியராய் விளங்கும் ஸோமாஸ்கந்த தியாகராஜ மூர்த்திக்கும் விசேஷமான வேற்றுமையுண்டென்பது புலப்படுகின்றதன்றோ?

நிற்க, "ஸாக்ஷாத்துரீய சிவம் ஸ்ரீ ஸோமாஸ்கந்த மூர்த்தமாகப் பிரத்தியக்ஷமானது மஹாகைலாஸத்தில்" என்னும் விஷயம் முன்னர் கூறப்பட்டது.

மஹாகைலாஸமென்பது சிந்தையும் மொழியும் செல்லாத வோரகண்டாநந்த நிலையென்பது வேதாகமங்களின் பரமஸித்தாந்தமாகும். கெஶீநாம்ஸுவஃ—கைஶாவஃ—ஸகல விஷயாநந்தங்களின் அதிஷ்டான பேரானந்தமே கைலாசமெனப்படும்; அல்லது, சிரஸிலுள்ள ஸஹஸ்ராரத்தில் சிவசக்திகளின் ஸாமரஸ்ய ஆநந்த நிலையையும் கைலாசமெனக்கூறலாமென்பது சிலபெரியார்களது கூற்றாகும்.

துரீய சிவம் அபரோக்ஷமாய் விளங்கும் நிலையே மஹாகைலாஸமாம்.

நிர்க்குணபரசிவம் திருமாலுக்கு முன்னர், ஸகளீகரித்து, ஸோமாஸ்கந்த மூர்த்தமாய் விளங்கினது மஹாவிஷ்ணுவின் ஆக்ஞாஸ்தானமேயாகும்.

"துரீய நிஷ்கள பரசிவம் அன்பர்களுக்கு அநுக்கிரஹம் செய்யும்பொருட்டு ஸகளீகரித்துப் பிரத்தியக்ஷமாகும் ஸ்தானம் ஆக்ஞையாம்" என்பது சாஸ்திர ஸித்தாந்தமல்லவா? இந்த ஆக்ஞாஸ்தானத்திற்கு அவிமுக்தம், புருவநடு, குளபதம், கந்தழி முதலிய பல பெயர்கள் சாஸ்திரங்களில் கூறப்படுகின்றன.

ஆதலின், எந்த ஒரு நிஷ்கள தூரீயபரசிவம் பிரஹ்மரந்திரம் ஸஹஸ்ராரம், துவாதசாந்தம், ஷோடசாந்தம் எனப் பலபடியாகக் கூறப்படும் மஹாகைலாஸத்தில் விளங்குகின்றதோ, அதே பரசிவம் ஸகளீகரித்து ஸோமாஸ்கந்த வடிவத்தோடு பிரத்தியக்ஷமான ஸ்தானம் திருமாலின் ஆக்ஞையேயாகும்.

பின்னர், அவர் திருப்பாற்கடலில் சேஷபர்யங்கத்தின்மேலமர்ந்து யோகநித்திரையிலுள்ளபொழுது, ஸ்ரீஸோமாஸ்கந்த மூர்த்தி, திருமாலின் ஹ்ருதய கமலத்தில், அவரது உஸ்வாஸ நிஸ்வாஸ வடிவ மூச்சுக்காற்றால், "ஹம்ஸ நடனம்" அதாவது "அஜபா நடனம்" புரிந்துகொண்டிருந்தனர்.

ஸ்ரீவாஸுதேவ ஸ்ரீ மஹாநாராயண உபநிஷத்திலும், புருஷ ஸூக்தத்திலும் திருமாலுக்கு விராட்ஸ்வரூபம் கூறப்பட்டுள்ளது.

ஆதலின், கமலாலயமென்னும் திருவாரூரானது விராட்புருஷனது ஸஹஸ்ராரமாகும் மஹாகைலாஸமென்றும், அப்புருஷனது ஆக்ஞா ஸ்தானமென்றும் கூறுவதில் யாதோராக்ஷேபணையுமின்று.

இதுகாறும் கூறியவாற்றால் நமக்குப் புலப்படும் தத்துவம் யாதெனில், கமலாலயமென்னும் திருவாரூரானது, விராட்ஸ்வரூபராகிய மஹாவிஷ்ணுவின் ஸஹஸ்ராரமாகும் மஹா கைலாஸமாகவும், அவருடைய ஆக்ஞாஸ்தானமாகும் அவிமுக்தமாகவும், அவரது ஹ்ருதய ஸ்தானமாகும் தஹராகாசமாகவும் விளங்குகின்றதென்பதேயாகும்.

இப்பொழுது திருவாரூரில் ஸ்ரீ தியாகராஜப்பெருமான் வீற்றிருக்கும் மஹாமண்டபமானது மஹாவிஷ்ணுவின் ஹ்ருதய ஸ்தானமாமெனக் கருதற்குரியதாயிருக்கின்றது. ஸ்ரீ தியாகேசன் அமர்ந்துள்ள மண்டபத்திற்குப் பின்பாகத்தில், அதாவது மேற்குத்திக்கில், ஸ்தூபியோடு விளங்கும் ஒரு கர்ப்பக்கிருஹம் இருக்கின்றது. இதில் ஒரு மூர்த்தியும் இல்லை. இந்த ஸ்தானந்தான் மஹாவிஷ்ணுவின் சிரஸ்தானமாய் இருத்தல்வேண்டும்.

ஆகவே, ஸ்ரீ தியாகராஜரது ஸந்நிதி *ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் சரீரமாமென்று கருதற்குரியதாயிருக்கின்றது. திருமால் திருப்பாற்கடலில் பள்ளிகொண்டுள்ள நிலையும் ஈண்டு ஸூசிப்பிக்கப்படுகின்றது.

அன்றியும், "𑌦𑌹𑍍𑌰𑌂 𑌵𑌿𑌪𑌾𑌪𑌂 𑌪𑌰𑌵𑍇𑌶𑍍𑌮𑌭𑍂𑌤𑌂 𑌯𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌂 𑌪𑍁𑌰𑌮𑌧𑍍𑌯𑌸𑌂𑌸𑍍𑌥𑌂 । 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌦𑌹𑍍𑌰𑌂 𑌗𑌗𑌨𑌂 𑌵𑌿𑌶𑍋𑌕𑌃 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌯𑌦𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌦𑍁𑌪𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 ॥

(இதன்பொருள்) பாபவாஸனைகளற்றதாயும், பரசிவத்திற்கு வாஸஸ்தானமாயும், சரீரத்தின் மத்தியபாகத்தில் விளங்குவதாயுமுள்ள ஹ்ருதயகமலத்தில் தஹராகாசம் இருக்கிறது. இதுசோகமற்றஸ்தானமாகும். மிகவும் நுட்பமாயும் அற்பமாயுமுள்ள இந்த தஹராகாசத்தில் ஸ்வயஞ்ஜோதியாய்ப்பிரகாசிக்கும் பரசிவமே யாவராலும் உபாஸிக்கத்தக்கது" என்னும் உபநிஷத்ப்ரமாணத்தின்படி ஸ்ரீ தியாகேசன் ஸந்நிதி மஹாவிஷ்ணுவின் ஹ்ருதயபுண்டரீகமென்றும், அதில் விளங்கும் தஹராகாசமென்றும், புலப்படுகின்றது.

தஹராகாசமே சிதாகாசமுமாகும். ஆகாசம் பூதாகாசமென்றும், சித்தாகாசமென்றும், சிதாகாசமென்றும் மூன்றுவகைப்படும். பூதாகாசமும் சித்தாகாசமும் காரியவடிவமாதலின் அவைகள் அநித்தியமாம். சிதாகாசமே நித்தியமானது. சிதாகாசந்தான் ஸச்சிதானந்தவடிவசித்சக்தியின் ஸ்தானமாம்; இது தான் ஸ்ரீசக்கிரம். இவ்விஷயம் அதிரஹஸ்யமானது. ஆதலின் குருமுகமாகவே அறிதற்குரியது.

சிதானந்த ஸ்வரூபராகிய, உமையோடும் ஸ்கந்தரோடுஞ்சேர்ந்த ஸத்ஸ்வரூப பரசிவமே ஸோமாஸ்கந்த வடிவமாமென்பது அடிக்கடி ஞாபகத்தில்வைத்துக்கொள்ளவேண்டிய விஷயமாகும்.

---

*குறிப்பு :—" ஸ்தூபியின் சிகரம் மஹாவிஷ்ணுவின் ஸஹஸ்ராரம்; கர்ப்பக்கிருஹம் அவரது சிரஸ்ஸு அதாவது முகமும் ஆக்ஞையும்; மஹாமண்டபம் அவரது ஹ்ருதயம்." என்றுணர்க.

ஸ்ரீசக்ரமாகும் சிதாகாசவடிவ தஹராகாசத்தில் விளங்கும் சிச்சக்தியின் ஸகளீகரித்த உருவந்தான் ஸோமாஸ்கந்தமூர்த்தியாகும். ஆதலின், ஸோமாஸ்கந்த தியாகராஜனது ஹ்ருதயம ஸ்ரீசக்கிரத்தின் பிந்துஸ்தானமாமென்று பெரியோர் கூறுவர். பிந்துஸ்தானம் நிஷ்கள ஸச்சிதானந்த சிவாபின்ன சிச்சக்தியாகுமென்றும், ஸகளீகரித்த ஸோமாஸ்கந்தமூர்த்தி ஸ்ரீகாமேஸ்வர காமேஸ்வரிகளென்றும், அவர்களின் ஸாமரஸ்யமே ஆநந்தஸ்வரூப குஹன் என்றும் அறியக்கிடக்கின்றது.

ஸ்ரீ தியாகராஜரது பிரபை அதாவது பிரகாசம் (மயூகம், கிரணங்கள்) ஸ்ரீசக்கரத்தின் ஆவரண தேவதைகளாகும்.

காமகாமேஸ்வரர்களாகிய ஸோமாஸ்கந்தமூர்த்தி அமர்ந்துள்ள ஸிம்ஹாஸனத்தின் நான்கு கால்கள் பிரஹ்ம, விஷ்ணு, ருத்ர, ஈஸ்வரர்களாகவும், ஆஸனம் ஸதாசிவமாகவும் அமைந்துள்ளது சாஸ்திரப்ரஸித்தமாம்.

இதனால் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அநுக்கிரஹம் ஆகிய பஞ்ச கிருத்தியங்களைச்செய்யும் காரணர்களான சதுர்முகப் பிரஹ்மாதிகளைத் தங்கள் தங்கள் தொழில்களைச் செய்யும்படி ஏவி, அவர்கட்கு அவசியமான ஆற்றலைத் தந்தருளுங் காரணத்தால் அவ்வைவரும் ஸிம்ஹாஸன ரூபமாய் அமைந்துள்ளனரென்பது புலனாகின்றது. இவ்விஷயம்,

"காரணேஶ்வரிதாத்மாதத்
ராஜதேய: பரஶ்ஶிவ:
ஸேவதாத்மராஜாவொத்
யதஸ்காராயதஸ்ஸிம்ஹ:"

என்று காமிகாமமத்தில் கூறப்பட்டுள்ளது ஈண்டறியத்தக்கது. பிரபஞ்ச ஸம்பந்தமான சிருஷ்டியாதி தொழில்களை நான்முகப் பிரமன் முதலிய காரணேசர்களான ஐவருக்கும் தியாகம்செய்து, தான் அத்தொழில்களுக்கு எள்ளளவும் ஸம்பந்தப்படாமல் விளங்

குங்காரணத்தால் காமேஸ்வரனுக்குத் தியாகராஜனென்னும் திருநாமம் ஏற்பட்டது.

## தியாகராஜ நாமாவின் பொருள் விளக்கம்.

1. இகபரஸுகங்களாகும் திரிவர்க்கங்களை அதாவது அறம், பொருள், இன்பங்களை நன்கு தியாகம் செய்த திவிரதர முமுக்ஷுக்களின் பரிசுத்தமான புத்தியில் விளங்குங் காரணத்தால் தியாகராஜனென்றும்,

2. எவனொருவன் தனது உடல், பொருள், ஆவிகளை உபாஸ்ய தேவதையாகும் பரசிவத்திற்கு அர்ப்பணஞ் செய்து அநந்நியமாய்ப் பக்தி செய்கின்றானோ, அந்த மேலான பக்தனது உள்ளத்தில் ஆவிர்ப்பவித்துப் பிரத்தியக்ஷமாகுங் காரணத்தால தியாகராஜனென்றும்,

3. கர்மகாண்டத்தின்படி ஒருவன் தான் செய்யவேண்டிய ஸகல கர்மாக்களையும் ஈஸ்வராக்ஞையென வுணர்ந்து, அவற்றின் பயனை எள்ளளவும் விரும்பாது நிஷ்காமனாய் இருப்பது தியாகமெனப்படும். இங்ஙனம் கர்மபலனைத் தியாகம் செய்தவனுடைய சித்தம் தூய்மையாயிருக்கும். அத்தகைய தூய சித்தத்தில் விளங்குங் காரணத்தால் தியாகராஜனென்றும் பெரியோர் கூறுவர்; ஆதலின், தியாகராஜஸ்வரூபம், ஞானம், பக்தி, கர்மம் என்னும் படிகளிலுள்ள ஸர்வ அதிகாரிகளாலும் ஸேவிக்கத் தக்கதென்று ஸித்திக்கின்றது.

ஸ்ரீ தியாகராஜமூர்த்தியின் திருமுகமண்டலம் தவிர, மற்ற அவயவங்கள் யாவும், அங்ஙனமே அபின்ன சக்தியின் திருமுகம் தவிர மற்ற எல்லா அவயவங்களும் மறைக்கப்பட்டுள்ளன. இது பிரத்தியக்ஷம். இதில் ஏதோ ஒரு ரஹஸ்யம் இருத்தல்வேண்டும். அஃதியாதெனின், அதைப்பற்றி ஆராய்வோம். ஸ்ரீ தியாகராஜாவின் ஹ்ருதயம் சிதாகாச வடிவ ஸ்ரீசக்கிரமாமென்று முன் கூறப்பட்டது.

சித்தாகாசமாகும் மனமும், பூதாகாசமும் தோன்றும்போது சிதாகாசம் தோன்றாது.

"பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்

பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்"

என்னும் பிரமாணம் கண்டு அறிதற்பாலது. நாமரூபநாட்டம் கிஞ்சித்துமில்லாத அகண்டாகார விருத்தியாகும் சிவ திருஷ்டியை யுடைய யாரோ ஒரு மஹானுக்கு உஹாராகாசமாகும் சிதாகாசத்தில் பேரொளிச் சக்கிரமாகும் ஸ்ரீசக்கிரம் மறைப்பின்றி விளங்கும். நம் போலியர் ஸ்ரீ தியாகேசனை "மூடுமந்திரம் ஏதையா? என்று வினவுதல் ஸஹஜமேயாகும்.

நிஷ்கள சிதாகாசம் தோன்றும்போது ஸகள அதாவது மூர்த்தமாயுள்ள நாமரூபங்கள் யாவும் மறைந்துவிடும். இதை யுணர்த்தவேதான் மூடப்பட்டிருக்கின்றது.

அன்றியும், ஸ்ரீ தியாகராஜரது ஹ்ருதயத்தில் சிதாகாசஸ்வரூப ஸ்ரீசக்ரம் அமைந்துள்ள ரஹஸ்யம் ஸ்ரீமுசுகுந்த ஸஹஸ்ரநாமத்தின் மூலமாய்ப்புலப்படுகின்றது.

அந்த ஸஹஸ்ர நாமாக்களில் சிலவற்றை இங்கே கூறுவது அவசியம் என்று தோன்றுகின்றது. அவை,

1. ஶ்ரீவித்யாதத்த்வகலாஶிவாய நம:

2. ஸ்ரீவீராஞ்ஜநீதவாஸாய நம:

3. ஶ்ரீவித்யாஸ்வாதிதஹ்ருதயாய நம:

4. ஸ்ரீவித்யாஹம்ஸஹம்ஸபீடாய நம:

5. ஸ்ரீவித்யாயாஸ்த்ரிவம்ஶாவத்யஸோர்ஶாக்ஷம்ஶிவரூபஶிவகாய நம:

6. ஸ்ரீவித்யாஜோவவைஹவாய நம:

7. கவதீகர தஷ்டகாய நம:

8. ஸ்ரீ ஸத்குரு காதாய நீலவஸ்த்ர க்லிஷ்ட மர்தன ஹ்ருதயங்கர்ய நம:

என்பனவாம்.

மேற்கூறிய நாமாக்களைத் தருவியாராயின் ஸ்ரீதியாகராஜமூர்த்தி ஸ்ரீவித்யாஸ்வரூபம் என்பது புலப்படாமற் போகாது.

சங்கை:—சிதாகாசஸ்வரூப ஸ்ரீசக்ரம் ஹ்ருதயத்தில் இருக்கட்டும்; ஹ்ருதயத்திலுள்ளது ஸஹஜமாகவே மறைபட்டுத்தானேயிருக்கும். அதை வஸ்திரத்தால் மூடுவது அவசியமில்லையே?

அங்ஙனம், ஹ்ருதயத்தை மூடினாலும், கழுத்து புஜங்கள், கைகள் முதலியவற்றை வஸ்திரத்தால் மூடிவைப்பதன் அவசியம் என்ன?

சமாதானம்:—கமலாலயம் என்னும் இச்சிறந்த சக்தி பீடத்தில் அக்ஷரபீடம், மந்த்ரபீடம் என்னும் இரண்டு பீடங்கள் உண்டு ஐம்பத்தோரக்ஷரங்களாகும் மாத்ருகைகள் விளங்கும் பீடம் அக்ஷரபீடமாகும். இது பராசக்தியாகும் கமலாம்பாள் ஸந்நிதியின் மேற்பாகத்திலுள்ளது. ஐம்பத்தோரக்ஷரங்கள்தாம் சப்தப்பிரஹமத்தின் ஸ்தூலரூப வைகரீ வடிவினவையாகும். அக்ஷரங்கள், ஷடத்துவாக்களில் வர்ணாத்துவாவிற்கு மூலமானவை; அக்ஷரங்கள் தனித்தோ இரண்டு மூன்று கூடியோ பதாத்துவாவாகின்றன.

இப்பதங்களே, சிறந்த விசேஷமான அர்த்தத்தோடு விளங்கி மனனத்தோடு ஜபம் செய்பவர்களைத் தரிக்கும்படி அதாவது கடைத்தேறும்படி செய்வதால், மந்த்ராத்துவா வாகின்றன.

மந்த்ரபீடம் ஸப்தகோடி மஹாமந்த்ர ஸ்வரூபமானது. வேதாகமபுராண உபநிஷத்துக்களில் பிரதிபாத்தியமான ஸப்த கோடி மஹாமந்த்ரங்களையெல்லாம் ஸ்ரீ அகஸ்திய பகவான் ஆகர்

ஷித்து இத்தலத்தில் மந்த்ர அல்லது சித்ர பீடமாக அமைத்துள்ளார் என்னும் விஷயம் புராணத்தால் புலப்படுகின்றது.

ஆகவே சுப்தபிரஹ்ம வடிவ வித்தியாஸ்வரூப ஸ்ரீ தியாகேசனது சரீரம் முழுமையும் அக்ஷர, மந்த்ர மயமாகவே இருக்கின்றது.

அக்ஷரங்களும் மஹாமந்த்ரங்களும் மிகவும் ரஹஸ்யமாகப் போற்றத்தக்கனவாதலின், அவற்றைச் சற்குரு மூலமாகவே அறிதல் வேண்டும். ஏனையோர்க்கு அவ்வக்ஷரங்களும் மஹாமந்த்ரங்களும் புலப்படாதிருக்கவே மந்த்ரமூர்த்தியின் சரீரம் வஸ்திரத்தால் மூடப்பட்டிருக்கின்றதென்றுணர்தல் அவசியம்.

சுவாமியினுடையவும் அம்பிகையினுடையவும் திருக்கரங்களில் ஒரு பகுதிமாத்திரம் சிறந்த அபிஷேக காலங்களில் தரிசிக்கலாம்.

## பாததரிசனம்

பரசிவத்தின் பாதாரவிந்த தரிசனமே பெருதற்குரிய பேறுகளுக்கெல்லாம் மிகச்சிறந்ததாகிய பேரானந்த நிலையாமென்பது வேதாகம சித்தாந்தமாகும். கமலையில் அஜாபநடம் பயிலும் தியாகேசனது திருவடிகளில், உத்தர (வலம்) பாத தரிசனம் பங்குனியுத்திரத் திருநாளன்றும், வாம (இடப்) பாததரிசனம் மார்க்கழி ஆதிரைத் திருநாளன்றும் சிவபுண்ணியமெய்திய சித்தமுடைய சிவஞானச் செல்வர்கட்குக் கிடைக்கும். இவற்றுள் வாமசரண தரிசனம் சாதனமாகவும், உத்தரசரண தரிசனம் சாத்தியமாகவும் பெரியோர் கூறுவர்.

வாம அல்லது இடதுபாதம் மடக்கிய காலடி; உத்தர அல்லது வலது பாதம் நீட்டிய காலடியாகும்.

ஸச்சிதானந்த வடிவ ஸோமாஸ்கந்த தியாகேசனது வலப்பாதம் மூலாதாரத்திலும், இடப்பாதம் அநாஹதம் அல்லது ஹ்ருதயத்தி

னும் புலனாவது போகசாதனைபுரியும் அஜபா ஞான யோகிகட்கு வெள்ளிடைமலையாம். இதன் ரஹஸ்யம் திருவிழாக்களின் தத்துவத்தை யாராயும்போது விமர்சிப்பாம்.

## வீதி விடங்கன்.

ஸ்ரீதியாகராஜனுக்கு வீதி விடங்கன் என்னும் மற்றொரு திருநாமமுண்டு.

விந—வக்ஷிணः டங்கயதி—வத்நாதி. இதிவிடங்கः, பக்ஷிகளைப்பந்தனம் செய்வது "விடங்கः" என்னும்சொற்பொருளாகும். ஈண்டு பக்ஷிகள் என்பவை ஹம்ஸங்களாகும். ஒரு ஜீவனது உஸ்வாஸ நிஸ்வாஸங்களே ஹம்ஸங்களாகுமென்பது "அஜபாகல்ப" மென்னும் சிறு நூலில் மிகத்தெளிவாய் விமர்சிக்கப்பட்டுள்ளது. ஹ்ருதய புண்டரீகத்திலமர்ந்துள்ள பரசிவஸ்வரூப ஸோமாஸ்கந்த மூர்த்தியானவர் சிவயோகியின் மூச்சுக்களாகும் ஹம்ஸங்களைப் பந்தித்துப் பாஞ்சபௌதிகப் பிரபஞ்சத்தில் அவனது மனம் செல்லாவாறு தடுத்துத் தன் ஸ்வரூபத்தையே இலட்சியமாகச் செய்து இடையறாது தியானம் செய்யும்படி செய்கின்றார். ஆதலின், தியாகேசனுக்கு விடங்கனென்னும் காரணப் பெயர் ஏற்பட்டுள்ளது.

வீதியென்பது ஸுஷும்நா மார்க்கம். வீதியாகும் ஸுஷும்னையில் மூலாதாரம் முதல் ஆக்ஞை வரையில் ஸஞ்சாரம் செய்யும் பக்ஷிகளாகும் ஹம்ஸங்களைப் பந்தனம் செய்து தன் வடிவத்தில் நிறுத்தச்செய்பவனுக்கு வீதி விடங்கனென்று பெயர்.

இந்த கமலாலய க்ஷேத்திரத்தில் தியாகராஜரது ஸந்நிதியில், அவருக்கு வலப்பக்கத்தில் ஒரு பெட்டியில் ஒரு ஸ்படிக லிங்கமுண்டு. இந்த லிங்கம் தியாகேசனது அருவுருவத்திருமேனி இந்த சிவலிங்கத்திற்கும் வீதிவிடங்கனென்னும் திருநாமமுண்டு. பிரதிதினம் இவ்விலிங்கத்திற்குத்தான் அபிஷேகாதிகள் நடைபெறுகின்றன. ஸுஷும்நா நாடியில் மூலாதாரத்தில் ஸ்வயம்பு லிங்கமும், அநாஹதத்தில் அதாவது ஹ்ருதயத்தில் பாணலிங்கமும்

உள்ளனவாக யோக சாஸ்திரங்கூறும். ஆதலின் ஹ்ருதய ஸ்தானத்தில் விளங்கும் லிங்கத்திற்கு வீதி விடங்கனென்று பெயர்.

## கமலாலயத்தில் நடைபெறும் திருவிழாக்கள்.

திருவாரூர் மூலாதார க்ஷேத்திரமாதலின், அதில், மீனஃசைத்ரத்தில், வஸந்த நவராத்திரியில் அதாவது ஸ்ரீலலிதாதேவி நவராத்திரியில், பங்குனிஉத்திர மஹோற்சவமும், பக்த்தகாட்சியாகும் உத்தரபாத தரிசனமும் நடைபெறுகின்றது.

இஃதன்றி, கன்யா-பாத்ரபதத்தில், ஆஸ்வயுஜநவராத்திரி யுற்சவம ஒன்றும் நடக்கிறது. இவ்விரண்டு திருவிழாக்களும் உத்தராயணம், தக்ஷிணாயனம் என்னும் இரண்டு அயனங்களுக்கிடையில் நடைபெறுகின்றன.

தக்ஷிணாயனத்தின் இறுதியில், மார்கழித்திருவாதிரை மஹோத்ஸவமும், உத்தராயணத்தின் இறுதிக்கும் தக்ஷிணாயனத்தின் ஆரம்பத்திற்கும் மத்தியில், ஆடிப்பூரமஹோத்ஸவமும் நடைபெறுகின்றன. மார்கழித்திருவாதிரை நாளில் முப்பத்து முக்கோடி தேவர்கட்கும் அருள்புரியும் தேவக்காக்ஷியும், வாமபாததரிசனமும் சிறப்புடையன. ஆடிப்பூரமகோற்சவம் யோகபீடத்து அமர்ந்துள்ள பராசக்தியாகும் ஸ்ரீகமலாம்பிகைக்கு நடக்கும் உற்சவமாகும். இத்தலத்தில் நடக்கும் உத்ஸவங்கள்யாவும்யோகரஹஸ்யங்களைக்குறிப்பிடுவனவாகும். (இந்நூல் 9ம் பக்கத்தையும், திருவிழாக்களின் தத்துவபடத்தையும் பார்க்கவும்).

ஸ்ரீவாகீசர் என்னும் அப்பர் சுவாமிகளருளிச்செய்த தேவாரத்தில் இரண்டுபதிகங்கள் பங்குனியுத்தரத்தையும் மார்கழித்திருவாதிரையையும் சிறப்பிக்கின்றன.

மார்கழித் திருவாதிரையன்று ஊஞ்சல் மண்டபத்தில் டோலோத்ஸவம் நடைபெறுகின்றது. ஊஞ்சல் என்னும் டோலோத்ஸவம் அநாஹதமாகும் ஹ்ருதயத்தில் பிராணனாகும் சூரியன் ஸஞ்சாரம்செய்யும் தனுர்மாதத்தில் வருவதையூன்றிக் கவ

# திருவிழாக்களின் தத்துவ விளக்கப் படம்.

துலாவிஷு.
ஆக்ஞை
புரட்டாசி ஐப்பசி.
(நவராத்திரி)

ஸுஷும்னை
பிங்கலை இடை

ஆவணி. கார்த்திகை.
ஸ்ரீசக்தி

சுக்லபக்ஷம்
கிருஷ்ணபக்ஷம்

அநாஹதம்.
ஆடி. மார்கழி.
(ஆடிப்பூரம்) (ஆதிரைத் திருநாள்)

ஆனி. தை.
மணிபூரகம்

வைகாசி. மாசி.
ஸ்வாதிஷ்டானம்

சித்திரை பங்குனி
(விஷு) (உத்திரம்)
மூலாதாரம்

ணிக்கத்தக்கது. ஹ்ருதயகமலத்திலமர்ந்துதான் பரமேஸ்வரன் அசைந்தாடுகின்றார்.

பிராண சூரியன் ஆக்ஞாஸ்தானத்தில் வரும்போது துலா விஷு ஏற்படுகின்றது. இது பெரும்பாலும் ஆஸ்வயுஜ (சண்டி) நவாத்திரிக்கு நெருங்கியே இருக்கும்.

ஆகவே, ஆக்ஞா சக்ரத்தைப் பிரதானமாகக்கொண்டது சண்டிகா நவாத்திரியுத்ஸவமென்றும், மூலாதார சக்ரத்தைப் பிரதானமாகக்கொண்டது வாஸந்திக லலிதா நவாத்திரி அதாவது பங்குனியுத்திர உத்ஸவமென்றும் கூறப்படும். அநாஹதமாகும் ஹ்ருதய கமல சக்ரத்தைப் பிரதானமாகக்கொண்டது மார்க்கழித் திருவாதிரை யுத்ஸவமும், ஆடிப்பூர மகோத்ஸவமுமாமென்பது பரம ரஹஸ்யமாகும்.

## தியாகராஜ லீலைகள்.

தேச, கால, வஸ்து பரிச்சேதமின்றி எங்கும் வியாபகமாய் அதனால் நிச்சலமாயுமுள்ள பரசிவம் அருட்சக்தியின் வியாபகத்தினால் சற்று அசைகின்றது. இந்த அசைவிற்கு "அருள் நடனம்" என்று பெயர். இதையே "பரலீலை" யென்று பெரியோர்கூறுவர். லீலை பரம், அபரம், பராபரம் என மூவகைத்தாம்.

பரலீலை:—அருள் நடனமாகும் ஆநந்த தாண்டவமாம்.

பராபரலீலை :—அஜபா நடனம் அல்லது ஹம்ஸ தாண்டவமாகும். இதனின்றும் ஸ்ருஷ்டியாதி பஞ்ச க்ருத்தியங்களும் அருட் சக்தியின் அம்சங்களாகிய ஆதிசக்தி, பராசக்தி முதலிய சக்திகளின் வியாபகத்தால் ஏற்படுவனவாகும். (இந்நூல் 24ம் பக்கம் பார்க்கவும்)

அபரலீலை :—இது ஸ்திதி க்ருத்தியம் செய்யும் ஞான சக்தியின் வியாபகத்தினால், உயிர்களின் மலத்தை

நீக்கி அவர்களுக்கு சிவஞானம் ஏற்படும் பொருட்டுச் செய்யவேண்டிய உபாயங்களை யுணர்த்துவதாகும். திருவாரூர் தியாகேசன் இயற்றிய லீலைகள் முந்நூற்றறுபதென்று அறியப்படுகின்றது. இவற்றுள் பதினொன்று லீலைகள் மாத்திரம் "தியாகராஜ லீலை" என்னும் பெயரால் தமிழ்ச்செய்யுள் வடிவத்தில் திருவாவடுதுறையாதீனத்து மஹாவித்துவான், திரிசிரபுரம் ஸ்ரீமீனாக்ஷி ஸுந்தரம் பிள்ளையவர்களால் இயற்றப்பட்டு, மஹாமஹோபாத்தியாய, தாக்ஷிணாத்ய கலாநிதி, டாக்டர் உ. வே. ஸ்வாமிநாதய்யர் அவர்களால் அச்சிடப்பட்டுள்ளது. எஞ்சிய மற்ற லீலைகளும் தமிழ் உரை நடையில் வடமொழியினின்றும் மொழிபெயர்க்கப்பட்டு அச்சிடத்தயாராய் இருப்பதாகத் தெரிகின்றது. ஸ்ரீ தியாகராஜ லீலைகள் முன்னூற்றறுபதும் ஸ்காந்த புராணம் நாகரகண்டம், கமலாலய மாஹாத்மியம் உத்தரபாகத்தில் கூறப்பட்டுள்ளதாக அறியப்படுகின்றது. (திரு. தியா. லீலை-நைமிசப்படலம், 46, 47 செய்)

இந்த லீலைகள் யாவும், பக்குவப்பட்ட உயிர்கள்மாட்டுப் பரசிவத்திற்குள்ள அபார கருணையை யுணர்த்துகின்றனவாகும்.

திருவாலவாய் மீனாக்ஷி ஸுந்தரேஶ்வராது அறுபத்திநான்கு திருவிளையாடல்களை யுணர்த்தும் திருவிளையாடற் புராணம் எங்ஙனமோ, அங்ஙனமே திருவாரூர்த் தியாகராஜரது திருவிளையாடற் புராணமும் அமைந்துள்ளது. இதனால் ஸ்ரீதியாகேசனது மஹத்துவம் வெளியாகின்றது.

## லீலாதத்துவம்.

ஸச்சிதாநந்த சித்சக்தி ஸ்வரூப ஸ்ரீதியாகேசன் ஸ்ரீவித்யாஸ்வரூபனென்றும், அதனால் ஸோம, ஸூர்ய, அக்னிகளென்னும்

மும்மண்டல ஸ்வரூப ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ மந்த்ரமூர்த்தியென்றும் முன் கூறப்பட்டது. அண்ட பிண்டங்கள் மும்மண்டல வடிவமே யாகும். பிண்டமாகிய சரீரத்தில் உள்ள மூலாதாராதி ஷட் சக்கிரங்களும் மும்மண்டல வடிவமே.

ஒவ்வொரு சரீரத்திலும் ஹ்ருதயாகாசத்தில் பரசிவம் அமர்ந்து அச்சரீரம் முழுமையும் வியாபித்து அதிஷ்டானமாய் விளங்குவது சாஸ்திரப் பிரசித்தமல்லவா? இதன்படி சரீர அதிஷ்டான சிவம் அக்கினிமண்டலமாகும் மூலாதாரம், ஸ்வாதிஷ்டான மென்னும் இரண்டு சக்கிரங்களிலும், சூரியமண்டலமென்னும் மணிபூரகம், அநாஹதம் என்னும் இரண்டு சக்கிரங்களிலும், சந்திரமண்டலமாகும் விசுத்தி ஆக்ஞையாகும் இரண்டு சக்கிரங்களிலும் வியாபித்து விளங்கும். ஒளியுடைப் பொருள்களான ஸோம, ஸூர்ய, அக்கினிகளென்னும் மும்மண்டலங்களில் வியாபித்துள்ள காரணத்தால், அவ்வொளிப்பொருள்களின் கதிர் (கிரணங்) களிலும் வியாபித்துள்ளதென்பது பெறப்படுகின்றது.

அக்கினி மண்டலத்திற்கு 108 கிரணங்களும், சூரியமண்டலத்திற்கு 116 கிரணங்களும், சந்திரமண்டலத்திற்கு 136 கிரணங்களும் உள்ளன. மும்மண்டலங்களுக்கும் சேர்ந்து 360 கிரணங்களுள்ளனவென்பது வேதாமங்களில் பிரசித்தமாம். ஆகவே இம்முந்நூற்றறுபது கிரணங்களிலும் பரசிவவடிவ தியாகராஜர் அதிஷ்டித்து வியாபித்து ஒவ்வொரு லீலையைப் புரிகின்றனரென்றுணர்தல் அவசியம்.

ஸ்ரீ தியாகராஜருக்குத் தொடர்புடைய சில சிறந்த பொருள்களுண்டென்று அறியப்படுகின்றது. அவை, இரண்டு வீர கட்கங்கள், செங்கழுநீர் மலர்மாலை, ஜவந்தீ புஷ்பக்காதணி, மணித்தண்டு, அக்கினிச்சத்ரம், பச்சைக்கற்பூர லேபனம், வலம்புரிச்சங்கநாதம், சுத்தமத்தளம், பஞ்சமுகவாத்தியம், பிரஹ்மதாளம் முதலியனவாகும்.

பொதுவாய் எல்லா மூர்த்திகளுக்கும் நாமம், நாடு, ஊர், ஆறு, மலை, வாஹனம், படை, முரசு, தார், கொடி என்னும் பத்து அங்கங்களுண்டு; இவையும் ஸ்ரீ தியாகராஜமூர்த்திக்கு உண்டு.

பொது, சிறப்பென்னும் பாகுபாட்டின் கீழுள்ள அங்கங்களின் விமர்சம் வருமாறு:—

## பொது.

1 திருநாமம்—ஸ்ரீ தியாகேசன்

2 நாடு—சோழநாடு

3 ஊர் (நகரம்)—திருவாரூர், கமலாலயம்

4 ஆறு—காவிரிநதி

5 மலை—கைலாஸம்

6 வாஹனம்(ஆஸனம்)—ஹ்ருதயகமலம், பஞ்சப்பிரஹ்மாத்ம ஸிம்ஹாஸனம்

7 படை—வீரவாட்படை

8 முரசு—பஞ்சமுகவாத்தியம், சுத்தமத்தளம்

9 தார்—செங்கழுநீர்மாலை

10 கொடி—தியாகக்கொடி

## சிறப்பு.

வீரகட்கம்:—ஸ்ரீ தியாகராஜ ஸோமாஸ்கந்த மூர்த்திக்கு முன் இரண்டு வாட்கள் விளங்குகின்றன அவற்றுள் ஒன்று அறச்செங்கோலையும், மற்றொன்று ஞானச் செங்கோலையும் உணர்த்துவனவாகும்.

செங்கழுநீர் மலர் மாலை:—செங்கழுநீர் மலரானது சந்திரோதயத் திற்குப்பின் மலரும். ஆதலின், இம் மலருக்கு அதிதேவதை சந்திரன்.

சந்திரனை அதிதேவதையாகவுடைய அத்தியாத்மப்பொருள் மனமாகும். ஆகவே செங்கழுநீர் மலர் மாலையானது சிறந்த பக்தர்களின் தூய்மையான மனங்களையும், அத்தூய மனங்களினின் றெழும் பகவதாகார விருத்திகளையுங் குறிக்குமென்று பெரியோர் கூறுவர்.

ஜவந்தீ புஷ்பக்காதணி :—ஜவந்தியென்பது மஞ்சள் நிறமுள்ள பெருஞ்சாமிந்தி புஷ்பமாகும். இதற்கு ஸூர்யகாந்தி புஷ்பமென்றும் மற்றொரு பெயருண்டு. இவை ஸதா ஸூர்யனுக்கு அபிமுகமே திரும்பி ஸூர்யகிரணங்களை ஆகர்ஷித்துக் கொண்டு விளங்குவனவாகும். ஸூர்யன் ஆத்மதேவதை. காது சப்தத்தை யறியும் இந்திரியம். பரமேஸ்வரனாகும் தியாகேசன், ஆத்மஸ்வரூப சூரியனை யதிதேவதையாகவுடைய ஜவந்தீ புஷ்பத்தைக் காதணியாகவுடைமையால் ஞானகாண்ட அதிகாரிகளாகும் தீவிரதர முமுக்ஷுக்கள் சுருதிப்பிரதிபாத்தியமான ஆத்மாவின்ன சிவஸ்வரூபத்தை அநுஸந்தானம் செய்வது ஸூசிப்பிக்கப்படுவது நுட்பமாய் உணரத்தக்கதாகும்.

மணித்தண்டு :—ஸ்ரீ தியாகராஜர் அசைந்தாடும் அஜபாநடனத்திற்கு இடப்பெறுந்தண்டிற்கு மணித்தண்டு என்று பெயர். இது ஸுஷும்ந நாடியைக் குறிக்கின்றது. இடை பிங்கலையென்னும் இரண்டு நாடிகளில் தியாகேசனது ரத்தின ஸிம்ஹாஸனம்

அமைய ஸோமாஸ்கந்த ஸச்சிதாநந்த பரசிவம், ஸுஷும்ந நாடியில் ஹ்ருதய குகையாகும் தஹ ராகாசத்தில் அமர்ந்து ஹம்ஸநடனம் புரிவர், இதைப் பாமர உயிர்கட்கு அறிவுறுத்த பாஹ்யத் தில் காட்டுவதற்குப் பெருமானேயமர்ந்தும் இருக் தண்டு மணித்தண்டாகும். தியாகராஜஸ்தலங் களிலெல்லாம் இத்தகைய தண்டு உண்டு.

அக்கினிச்சத்திரம் :—நெருப்புக்குடை. இது வஹ்நிப்பிரகார வடிவமாயுள்ளது. இது, " ஸ்ரீ தியாகேசன் சிதக்கினியின் அறிவுக்கதிர்களில் விளங்கு பவன் " என்னும் சிறந்த பொருளைச் சூசிப் பிக்கின்றது.

பச்சைக்கற்பூரப்பூச்சு;—பச்சைக்கற்பூரம் வெண்மையாகவும், மிக எளிதில் தீப ஜ்வாலையைப்பற்றும் தன்மை யுடையதாகவும் இருக்கின்றது. சுத்த ஸத்துவ குணத்தோடும், அக்கினி வடிவ சிவத்தை யபரோக்ஷமாய் அறியும் ஆற்ற லோடுமுள்ள சிவாபின்ன ஆத்மகோசார வ்ருத்தியே பச்சைக்கற்பூர லேபனத்தின தத்துவமாகும்.

வலம்புரிச்சங்கநாதம்:—கழுத்திற்குச் சங்கத்தை உபமானமாகக் கூறுதல் கவி மரபு. சங்கமாகும் கண்டத் தைப் பேதித்துக்கொண்டு பிரணவ நாதம் தோன்றிற்று என்று சாஸ்திரங்கள் கூறு கின்றன. ஆகவே பிரணவ உத்கீதமே வலம்புரிச்சங்கநாதத்தின் ரஹஸ்யார்த்த மாகும்.

பஞ்சமுகவாத்தியம்:—இது ஒரு சிறந்த வாத்தியமாகும் இதில் ஐந்து விதமான நாதங்கள் ஒலிக்கும். இதன்

த்துவம் பிரணவ நாதத்தின் பாகுபாடுக ளாகிய அகார, உகார, மகார பிந்து நாதங் களையாகும். இவை முறையே பிரஹ்ம, விஷ்ணு, உருத்திர மகேஶ்வர ஸதாசிவர்கள், அல்லது, ஸத்யோஜாத, வாமதேவ, அகோர, தத்புருஷ, ஈசானர்களையும் குறிப்பிடுவன வாகும். பிரணவநாதமே பஞ்சமுக வாத்தி யத்தின் தத்துவமாகும்.

சுத்தமத்தளம் :—இது ஸாதாரணமாய் உள்ள மிருதங்கங்களைவிட நீண்டிருக்கும். இதன் ஒலி "தத் த்வம்" "தத் த்வம்" என்னும் மஹாவாக்கியங்களைப் புலப்படுத்தும்; ஸத்குரு முகமாய் அறியவேண் டிய அர்த்தத்தை இந்த வாத்தியம் புலப்படுத்து வது உணரத்தக்கது.

பிரஹ்மதாளம் :—இதுவும் மிகப்பெரிதாய் இருக்கும். இதன் ஒலி "ஸோஹம்" "அஹம்ஸ:" என்பதைப் புலப் படுத்துவதாய் இருக்கின்றது. இதனால் அஜபா ரஹஸ்யம் உணரப்படுகின்றது.

இங்ஙனம், ஒருவாறு, தியாகப்பெருமானுக்குத் தொடர் புடைய பல பொருள்களைப்பற்றி விமர்சிக்கப்பட்டது.

## பஞ்சலிங்கங்கள்.

இந்நூலின் 18-ம் பக்கத்தில், வன்மீகேச்சுரம், ஹாடகேச் சுரம், அசலேஶ்வரம், ஆநந்தேஶ்வரம், ஸித்தேஶ்வரம் என்பவை பஞ்சலிங்கங்களாகுமென்று கூறப்பட்டுள்ளது. இவற்றுள் வன்மீகேச்சுரத்தைப்பற்றியும் ஹாடகேச்சுரத்தைப்பற்றியும் தத் துவ ஆராய்ச்சியோடுகூடியவிமர்சம் சுருக்கமாகச் செய்யப்பட்டது. ஈண்டு மற்ற மூன்று லிங்கங்களைப்பற்றி ஒருவாறு விமர்சிப்பாம்.

## அசலேஸ்வரம்.

சமத்காரனென்னும் பெயருடைய ஓரரசனால் ஸ்தாபிக்கப் பட்ட லிங்கம் இதுவாகும். இதில், அம் மன்னவனது வேண்டு கோட்கிரங்கி, அங்கிங்கெனாதபடியெங்கும் வியாபித்துள்ளபரசிவம் விசேஷ ஸாந்நித்தியம் பெற்றுள்ள காரணத்தால் 'அசலேசம், என் னும் பெயரேற்பட்டது. இத்தலத்திற்குத் "திருவாரூர் அறநெறி" என்றும் மற்றொரு பெயருண்டு. இதற்குத் திருநாவுக்கரசு சுவா மிகளின் தேவாரத்துள் ஒரு திருப்பதிகம் உண்டு. ஈண்டு மாசி மாதச் சிவராத்திரி நாள் விசேஷமானது, இவ்வசலேசச் சிவலிங் கத்தில் தனிப்பட்ட ஒரு சிறந்த மகிமையுண்டு. அது ஸ்ரீ அச லேஶ்வர லிங்கத்தின் நிழல் கிழ்த்திசையிலன்றி மற்ற தெற்கு மேற்கு, வடக்குத் திசைகளில் விழாமையேயாகும். கர்ப்பக்கிர ஹத்திற்குள் அமர்ந்துள்ள லிங்கமூர்த்திக்கு நிழல் விளக்குகளின் ஒளிகளால் ஏற்படுவதேயாகும். அசலேசம் மேற்கு பார்த்த ஸந்நிதியாகும்.

## ஆநந்தேஶ்வரம்.

இது இரண்டாவது பிராகாரத்தின் மேற்குத் திக்கில் விளங்கு வது. கிழக்கே பார்த்த ஸந்நிதி. மங்கணர் என்னும் முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட மூர்த்தி, பரசிவம் மங்கண முனிவற் குப் பிரத்தியக்ஷமாய் அருட்காக்ஷி தந்தருளியபோது, அம்முனிவர் ஆநந்தமெய்திய காரணத்தால், அவரால் பிரதிஷ்டை செய்யப் பட்ட லிங்கத்திற்கு ஆநந்தேசர் என்னும் திருநாமம் ஏற்பட்டது.

மங்கணர்=ஜீவகோடியில் சிரேஷ்டரான தீவிரதரமுமுக்ஷு.

## ஸித்தேஶ்வரம்.

இத்தலம், இரண்டாவது பிராகாரத்தில் வடகிழக்குத்திசை யில் விளங்குகின்றது. ஹம்ஸன் என்னும் ஓரரசன் பஞ்சாக்ஷர மஹாமந்த்ரத்தை ஜபம் செய்து அதனால் ஸகல சித்திகளையும்

பெற்றான்; அக்காரணத்தால் அவனுக்குச் சித்தீசன் என்னும் திருநாமம் உண்டாயது. சித்தீசன் ஏனைய சித்திகள் யாவையும் பெற்றும் புத்திர சித்தியை மாத்திரம் பெறவில்லை. ஸந்தானப் பேற்றிற்காகக் கர்மகாண்டத்தில் விதித்துள்ளன யாவும் அவனால் செய்யப்பட்டது. ஒன்றும் பயன்பெறவில்லை. பின்னர், அவன் ஸுர குருவாகிய பிரஹஸ்பதியைத் தரிசித்து அவரிடத்தில் தனது குறையை விண்ணப்பித்துக்கொண்டனன். ஸுரகுரு ஹம்ஸனென்னும் சித்தீசனைக் கமலாலயம் சென்று தவமியற்றும்படி பணித்தனர். அவனும் வியாழ பகவான் கட்டளையிட்டபடியே திருவாரூருக்கு வந்து, பராசக்தி பீடத்தில் யோகத்திலமர்ந்துள்ள கமலாம்பிகையை வணங்கி, ஒரு சிவலிங்கத்தினைப் பிரதிஷ்டை செய்து தியானத்திலமர்ந்தனன். அவனுக்குப் புற்றிடங்கொண்ட புநிதன் பிரத்தியக்ஷமாகி அவனது விழைவைப் பூர்த்தி செய்தனன். சித்தீசனென்னும் ஹம்ஸனால் ஸ்தாபிக்கப்பட்டு அபீஷ்ட ஸித்தியடையப்பட்டதனால் ஸித்தீஸ்வரம் என்னும் பெயரேற்பட்டது.

ஸித்தீசம், அசலேசம், ஆநந்தேசம் என்னும் மூன்று லிங்கங்களையும் ஒரு உத்தம அதிகாரி அதாவது இருவினையொப்பு, மலபரிபாகம், சக்திநிபாதம் இவைகளையுடைய தீவிரதரமுமுக்ஷு தரிசிப்பானேயாகில் அவன் முறையே, சிவஞானமாகும் புத்திரப் பேற்றையும், நிச்சலமாய்ச் சிவஸ்வரூபத்தில் அழுந்திய சிவயோகத்தையும், சிவஸ்வரூப ஆநந்த வடிவமாய் விளங்கும் நன்னிலையையும் பெறுவனென்பது திண்ணம்.

குறிப்பு :—ஹம்ஸன்=உஸ்வாஸ நிஸ்வாஸங்களையுடைய ஒரு ஜீவன். இவனது முற்பிறப்புக்களின் நல்வினைப்பயனால் ஹம்ஸனுக்கு ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹாமந்த்ரம் ஸத்குருவின் மூலமாய்க் கிடைத்து சித்தியாயிற்று. பஞ்சாக்ஷர ஸித்தியினால் அவனது சித்தம் தூய்மையாக்கப்பட்டு ஜீவகாருண்யம், பாசவைராக்கியம், ஈஸ்வராநுக்கிரஹம், ஸாதுஸங்கம் முதலிய சிறந்த ஸாதனங்கள் ஏற்பட்டு சிவஞானமுண்டாதற்குத் தக்க அதிகாரியானன். இவ

ஞானமே புத்திரன் "ஹம்ஸனுக்குப் புத்திரப்பேறு சிவனருளால் உண்டாயது" என்பது ஹம்ஸன் சிவஞானம் பெற்றான் என்பதேயாகும்.

ஈஸ்வரானுக்கிரஹத்தினாலும், ஸத்குருவின் அருளாலும், சிவஞான சாஸ்திர விசாரத்தினாலும் ஏற்பட்ட சிவஞானத்தை நுண்ணறிவினால் மனனம் செய்யச்செய்ய அது திடப்பட்டு சிவஸ்வரூபத்தில் அழுந்திய யோகம் ஏற்படும். இதுதான் அசல ஸ்திதி. இந்நிலையில் உலகத்தோற்றமே யிராது. ஸதா அகண்ட சிவஸ்வரூபமே உணரப்படும். பின்னர், ஸ்வகீய ஆநந்த வெள்ளம் பொங்கித்ததும்பி பூர்ணமாய் விளங்கும் நிலை எய்தும்.

சித்தீசம், அசலேசம், ஆநந்தேசம் என்னும் இம்மூன்று லிங்கங்களின் தரிசனத்தினால் தத்துவஞானமும், நிச்சலமான சிவயோகமும், ஆநந்தாநுபவமும் ஏற்படுமென்பது பரமரஹஸ்யமாம்.

## பக்த காக்ஷியின் வரலாறும் தத்துவமும்.

பக்த காக்ஷியென்பது பரமசிவம் உண்மைச்சிவயோக பக்தர்கட்கு, அருளின் மேலீட்டால், தரும் காட்சியேயாகும். கமலாலயத்தில் தியாகப்பெருமான் பங்குனியுத்திரத்தன்று தனது வலப்பாததரிசனத்தைப் பதஞ்சலி, வியாக்ரபாதர், ஸனகர், ஸநந்தனர், ஸனத்குமாரர், ஸனத்ஸுஜாதர் முதலிய உண்மைச் சிவயோகிகட்குத் தந்தருளிய திருநாளே பக்தகாக்ஷித் திருநாளாகும் என்று புராணம் கூறுகின்றது.

மாசிமாதம் ஹஸ்த நக்ஷத்திரத்தன்று, முசுகுந்த சக்ரவர்த்தி தேவலோகத்தினின்று கொண்டுவந்த ஸ்ரீ தியாகராஜமூர்த்தியைத் திருவாரூரில் ஆகமவிதிப்படி ஸ்தாபித்தனன். ஆதலின், இத்தலத்தில் ஹஸ்த நக்ஷத்திரம் மிகவும் விசேஷமானது. பங்குனி உத்திரத்தன்று நடக்கும் பக்தகாக்ஷி மஹோத்ஸவம் மீன சைத்திரப்பிரஹ்மோத்ஸவத்தின் கடைசிநாளாகும். இன்றுதான் தீர்த்தம் அருளும் நாள். இதைத் தீர்த்தவாரி யென்று வழங்குகிறார்கள்.

தீர்த்தம் என்றால் " தீயஃதெதநாஸகீஸபாயாஷ்டீயஃதெஅஷ்டி ஸம்வஃழீ தஷ்டாத்தீயஃஉதிஷ்டாஹ: வெஃதாமஃவிஸாஸாஃதா:॥ என்னும் பிரமாணத்தின்படி ஒரு ஜீவனுக்குள்ள ஸர்வ அநர்த்தங்களையும் நசிப்பித்து, ஸ்திரமாயுள்ள சிவஸ்வரூபப் பேரானந்த நிலையை யருளுவது என்பது ரஹஸ்யார்த்தமாம்.

மாசிமாதம் ஹஸ்த நக்ஷத்திரத்தன்று கமலாலயத்தில் பங்குனி உத்திர பிரஹ்மோத்ஸவத்திற்காக தர்மத்துவஜமென்று கூறப்படும் விருஷபக்கொடி ஏற்றப்படும். அன்றே ஸ்ரீ சண்டேசநாயனார் மூலமாக முப்பத்து முக்கோடி தேவகணங்கள், ரிஷிகணங்கள், ஸித்த சாரண, கின்னர, கிம்புருஷாதி கணங்கள், பக்த கணங்கள் முதலியவர்கட்குப் பிரஹ்மோத்ஸவ ஸ்ரீமுகம் அனுப்பப்படும்.

பங்குனி மாதம் சுக்லபக்ஷ பஞ்சமி கிருத்திகை முதல் பத்துநாள் பிரஹ்மோத்ஸவம் நடைபெறும். பங்குனி, ஆயிலியத்தன்று ரத ஆரோஹணமாகும்.

"இப்படிமுறையி லேனைய நாளும்
எந்தையை நகர்வலஞ் செய்வித்து
ஒப்பில் ஆயிலியத் தோளி மணித் தேரி
னு லாவரச் செய்து மற்றிடை நாட்
செப்புநூல் விதியிற் கடன்களும் செய்வித்
தரசர் கோன் சிறந்த உத்திரநாள்
மைப்பெருங் கண்டர்க் காகம விதியின்
மஞ்சன மாட்டு வித்தனனால்",

என்னும் புராணச்செய்யுட் பிரமாணத்தின்படி ஆயிலியத்தன்று திருத்தேர் திருநாளும், உத்திரத்தன்று மஹா அபிஷேகமும் நடக்கின்றன.

இந்த மஹாபிஷேகம் தேவாஸ்ரய மஹாமண்டபமென்னும் திருநாமத்தையுடைய ஆயிரக்கால் மண்டபத்தில் நடைபெறும். ஆயிரக்கால் மண்டபமே ஸஹஸ்ராரமெனப் பெரியோர் கூறுவர். ஸஹஸ்ராரமே மஹாகைலாஸமல்லவா? மஹாகைலாஸத்தில் துரீய

பரசிவத்திற்கு "அபிஷேகப்ரியஃசிவஃ" என்னும் பிரமாணத்தின் படி திருமஞ்சனமாட்டிப் பின், ஸச்சிதாநந்த ஸோமாஸ்கந்த தியாகவள்ளலுக்கு உரித்தான பஞ்சப்பிரஹ்ம ரத்ன ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கச்செய்து, அங்கிருந்து பக்தகாக்ஷி மண்டபத்திற்கு எழுந்தருளச்செய்வர். இங்ஙனம் எழுந்தருளும்போது பரசிவம், ஆத்மைகவேத்ய பரமஹம்ஸ நடனம் புரிவர். அதிரஹஸ்யமாயும், ஸகல வேதாகம, புராண, உபநிஷத் பிரதிபாத்யமாயுமுள்ள இந்த அஜபா நடனத்தை, ஸகல, கேவல, பிரளயாகலரென்னும் பக்த கணங்கள் பிரத்தியக் திருஷ்டியால் அதாவது உள்ளுணர்வால் உணர்ந்து, ஆணவம், மாயை, கார்மிகமென்னும மும்மலங்களை யொழித்து, பதி, பசு, பாசலக்ஷணங்களைச் செவ்வனே அறிந்து, தத், துவம், அஸி யென்னும் மூன்று பதங்களோடு கூடிய மஹாவாக்கியத்தின் அகண்ட அர்த்தத்தை யநுஸந்தித்துச் சிவஸ்வரூபமாகவே விளங்குவர். தியாகேசன் ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து பக்த காக்ஷி மஹா மண்டபத்திற்கு எழுந்தருளும்போது இடையே உள்ள பந்தலுக்கு யோக விஞ்ஞான ஆநந்தப்பந்தலென்பது பெயராகும்.

இதன் கீழ் பரசிவம் விளங்கி அஜபா நடனம் புரிந்து கொண்டு, எல்லாப் பக்தர்களையும் அருள் நோக்கால் அநுக்கிரஹித்து திருக் தீக்ஷை செய்வர். இதனையே சக்ஷு தீக்ஷை யென்று சாஸ்திரங்கள் கூறும். தீக்ஷை செய்விப்பவர் குருநாதரேயாவர். கமலாலயத்தில், பங்குனி உத்திரத்தன்று நடைபெறும் பக்த காக்ஷியில் ஸச்சிதாநந்த அருள் வடிவ ஸோமாஸ்கந்த தியாகராஜாவே ஆதிகுருராஜாவாக விளங்கி, அக்காக்ஷித் திருநாளில், யோகவிஞ்ஞான ஆநந்தப்பந்தலின் கீழ் குழுமியுள்ள பக்தர்களின் பரிபாக தாரதம்மியங்களைக் கிஞ்சித்தும் வேண்டாமல், ஒருங்கே யாவர்க்கும் சக்ஷு தீக்ஷையருளிப் பாததரிசனம் தருகின்றனர். பாததரிசனமே பேராநந்த நிலையாகுமென்று முன் கூறப்பட்டது வலப்பாதமே குரு பாதுகை.

பாதுநாதஃ ஸர்வஜந்தூந் க்ஷாமோந்தஹ ஹஸ்த்யாதஃ।
காங்க்ஷிதாய ஸ்வாந்தாநந்தாதஃ பாதஸ்சேத்யுஹியதே॥

என்னும் பிரமாணத்தின்படி, ஸாதகனுக்கும் உண்மைப்பக்தனுடைய ஸகல பாபங்களையும் போக்கி ஜனன மரணமென்னும் மஹாபயத்தினின்றும் அவனைக்காப்பாற்றி, அவன் அதிக ஆவலோடு விரும்பும் பரமாநந்த நிலையை யளிப்பதால் பாதுகையென்னும் திருநாமம் ஏற்பட்டது. ஆதலின், ஆசார்யனாய் விளங்கும் ஸ்ரீ தியாகராஜாவின் வலப்பாத தரிசனத்தினால் ஸர்வஜீவர்களுடைய அநர்த்த நிவர்த்தியும், ஆநந்த பிராப்தியும் ஏற்படுமென்பது குன்றின்மேலிட்ட விளக்காகும்.

எங்ஙனம், ஒரு ஸத்குருவானவர் தன்னை யுண்மையாய்த் தஞ்சம் புகுந்து இறைஞ்சி நின்ற ஸத்சிஷ்யன், உளமுவந்து வேண்டுவதைக்குறிப்பாலுணர்ந்து இன்னருள் புரிவரோ, அங்ஙனமே, திருவாரூர் ஸோமாஸ்கந்தப்பெருமானும் உயிர்க்கணங்கள் வேண்டுவனவற்றை யவர்கட்கு உணர்வித்து, அதனால், அவர்கள் வேண்ட, யாதொரு தடையுமின்றி அவற்றை ஈதலால் தியாகராஜன், (தியாகவள்ளல்) என்னும் திருநாமம் எய்தியதாகக் கருதற்குரியதாயுள்ளது,

தியாகராஜ சப்தத்திற்குப் பல படியாகப் பொருள் கூறலாமெனினும், மேலே கூறப்பட்ட பொருள் மிகப் பொருத்தமாயுள்ளதென்பது அறிஞர்கட்குப்புலப்படும்.

அநாதிமுக்த சித்ரூபியாகிய நிஷ்கள பரசிவம் திருமாலுக்குப் பிரத்யக்ஷமாகி, அவரால், ஸகளத்திருமேனி தாங்கிய ஸோமாஸ்கந்த வடிவத்தில் உபாஸிக்கப்பட்டுப், பின்னர், விண்ணாட்டில் தேவேந்திரனால் பூசிக்கப்பட்டு, அதன்பின், இம்மண்ணுலகில் ஸ்ரீகமலாலயத்தில் முசுகுந்த சக்கிரவர்த்தியால் பிரதிஷ்டிக்கப்பட்டதென்னும் வரலாற்றைப் புராணங்கூறுகின்றது.

இந்த ஸோமாஸ்கந்த மூர்த்திக்கு ஸ்ரீ தியாகராஜனென்னும் திருநாமம் எங்ஙனம் ஏற்பட்டதென்னும் விஷயம் புராணத்தின் மூலமாய் அறிதற்குக் கூடவில்லை.

ஆயினும் "திருவாரூர்த் தியாகராஜலீலை" யென்னும் நூலில், கடவுள் வாழ்த்து 18-ம் செய்யுள். ஸ்ரீதியாகவள்ளலைத் துதிக்கின்றது. அது வருமாறு :—

கலகமறம் ஒழிய அறம் குதுகலிப்பப் பல்லுயிரும்
களிப்புள் மூழ்கி
இலகமணி முடிமுடிவைத் திருபத்தைந் தகவையுடை
ஏந்த லாகித்
திலகநுதல்வெண்ணீறு திகழுமணிப் பூணொளிரச்
செங்கோல் கைக்கொண்
டுலகமுழு தாண்டவருள்தியாகரா ஜப்பெருமான்
ஒளிர்தாள் போற்றி.

உலகத்தில் அதர்மம் நசித்திடவும், தர்மம் ஓங்கி வளரவும், அதனால் மக்கள் களிக்கடலில் மூழ்கி இன்புற்றிருக்கவும் திருவுளங்கொண்டு, நெற்றியில் திருநீறு திகழ, நவரத்ன கசிதமான ஆபரணங்களையும் அக்கமணி மாலையையும் பூண்டு, உலகமுழுதும் ஆண்டருளச் செங்கோல் தாங்கி, இருபத்தைந்து வயதுடைய அரசகுமாரனாய் இறைவன் தோன்றினான். இங்ஙனம் தோன்றிய ஸ்ரீ தியாகராஜப்பெருமானது சரணங்களைத் துதிக்கின்றேன்.

ஸோமாஸ்கந்த வடிவத்தில் விளங்கும் இறைவன், தியாகராஜனென்னும் திருப்பெயர் பூண்டு, அரசகுமாரனாய்த்தோன்றிய வரலாறு ஈண்டு சுருக்கமாய்க் கூறுவோம்.

தொண்டை வளநாட்டில், காஞ்சிமா நகரத்தில் சூரிய குலத்துதித்த சங்கர சேவகச்சோழனென்னும் ஓரரசன் செங்கோல் செலுத்திவந்தான். அவன் மகப்பேறின்மையால் வருந்தி " வித்தகர்பொற் கிண்கிணிக்கால் விமலவிடங்கரைக்கருது, முத்தமர்க்கு.

முடியாததுண்டு கோலோ?" என்று தனதுள்ளத்தில் தீர்மானித்துக் கமலாலயம் சென்று ஸ்ரீ ஸோமாஸ்கந்த வீதி விடங்கரைக் குறித்துத் தவமியற்றினன். ஸோமாஸ்கந்த வீதிவிடங்கர் அவனுக்குப் பிரத்தியக்ஷமாகி சோழன் வேண்டிய மகப்பேறும் வரத்தினைத்தந்தருளினர். பின் சங்கர சேவகச்சோழன் தனது ராஜதானியாகும் காஞ்சிமா நகரத்தை யடைந்து தன் மனைவியிடம் சிவ வரப்பிரஸாதத்தைச் செப்பி, யரசுபுரிந்திருந்தான். திருவாரூர் வீதிவிடங்கருளிய வரத்தின்படியே அவ்வளவனுக்கு ஒரு ஆண்மகவுண்டாயிற்று. தந்தையாகும் சங்கரசேவகச்சோழன் தன்னுடல் பூரிக்கக் களிக்கடலில் திளைத்துத் தன் மகனுக்கு "நரசிங்கச்சோழன் என நாமகரணம் செய்வித்து அவனுக்குப் பலகலை பயிற்றிச் சோபாவதி யென்னும் பெண்ணை மணம் புணர்த்தினன்; அன்றியும், அரசாட்சியையும் அவனிடம் ஒப்படைத்துச் சங்கர சேவகவளவன் பூங்கோயிலை யடைந்து வீதிவிடங்கப்பெருமானையே ஸதா தியானித்துக்கொண்டு தனது வாழ்நாள் கழித்து வந்தான்.

நரசிங்கச்சோழன் தந்தையின் அரசாட்சியைச் செவ்வனே நடத்திவந்து ஒருநாள் வேட்டைக்குச் செல்லக் காட்டில் ஒரு புலியால் உயிர் நீத்தனன். நரசிங்கச்சோழன் மரணமெய்தியபோது அவனது மனையாள் சோபாவதி கர்ப்பவதியாயிருந்தனள். மகனுடைய மரணச்செய்தி திருவாரூரிலுள்ள சங்கரசேவகச்சோழனது காதிற்கெட்டியது. தந்தை மகனது மரணத்திற்குத் துக்கித்துப் பரமனதருளால் ஒருவாறு தேறி மகனுக்குச்செய்யவேண்டிய சாமக்கிரியைகளையெல்லாம் செய்து முடித்துப் பின் தனது மருமகளாகிய சோபாவதியின் கர்ப்பத்தில் ஆண் குழந்தை பிறக்க வேண்டுமென்று ஆரூரிறைவனை யிறைஞ்சினன்.

ஆரூரான் அவ்வளவன் முன் தோன்றினன். தோன்றவும், சங்கர சேவகச்சோழன்,

அரியணைமே லம்மையிளஞ் சேயொடினி தமர் கருணை
யண்ணல்! கேட்டி!!
பிரியமிகு மென்மருகி வயிற்றுறுபி ளாண்மகவாய்ப்
பிறக்க வேண்டும்

தெரியவஃ தொருபதினு றகவையுறு மளவுமுயர்
தேவ! நீயே
யுரியமணி முடிபுனைந்து புரவலரே றாகியிருந்
தோம்பல் வேண்டும்.
பண்டார மரியணைவாம் பரிகரிதேர் படைஞர் முதற்
பலவும் நீயே
கொண்டார வெவ்வுயிரும் களிதூங்கப் புரந்தரசு
குயிற்ற வேண்டும்;
விண்டார ணியுமடைதற் கரியநின்றுண் மலரடியேன்
மேவி யின்பம்
உண்டார வேண்டுமிவை யளித்தியென நின்றிரந்தான்
உறுசீர் வேந்தன்.

இங்ஙன் வளவன் வேண்டலும்,

புரவலன்வா யுரைத்தவர முழுதளித்தியா மரசுபுரி
போது மேம்மைப்
பரவநினைந் தவர்கண்டோர் முதலியர்நந் திருவடிக்கண்
பதிவ ராலென்
றரவமணிக் கிண்கிணிக்கா லையன் மறைந் தரியணைமேல்
அமர்ந்தான் அந்த
வரவளவன் ஆநந்த மயமான பெருங்கதியை
மருவி னானே.

சங்கர சேவகவளவன் சிவகதியடைந்ததும், ஆரூரப்பன் இருபத்தைந்து வயதுடைய ஓரரசக் காளையாய்த் தோன்றி வளவனுக்கு வரமருளிய வண்ணம் அவ்வளவனது செங்கோலைத்தாங்கி நல்லரசு புரிந்து வந்தனன் அப்பொழுது அரசக்குரிசிலாய்த் தோன்றிய ஆரூரான் எல்லா மன்னர்கட்கும் ஓர் ஓலை விடுத்தனன். அஃ தெங்ஙனமெனின்,

நன்னிதிக் கிழவன் தோழனு கியகோன்
நரசிங்க வபயனுக் கினிச்சீர்
மன்னிய வுதிக்கு மகன்சிவ தத்தன்
மனிதனு யிருந்தல களிப்போம்

துன்னிய நீவிர் யாவரும் நன்(
சூழ்ந்துணர்ந் திடுமின்மற் றிவ்வா
றின்னியல் தியாக ராஜரென் றுறுகை
யெழுத்தொடும் எண்ணின் மன்னவர்க்கும்.

மறையோர் மூலம் அனுப்பினன். அம்முடங்கலில் "தியாக ராஜன்" என்று கையெழுத்திடப்பட்டது.

பின்னர் நரசிங்கச்சோழன் மனைவி சோபாவதி சிவனருளால் ஓராண்மகவை யீன்றனள். அக்குழவிக்குச் சிவதத்தன் என்னுந் திருநாமமிடப்பட்டது. இவ்வாலாற்றால்,

திருவாரூர் ஸோமாஸ்கந்த வீதிவிடங்கப்பெருமான், சங்கா சேவகவளவனுக்கு வரமருளிய வண்ணம், இருபத்தைந்து வய துடைய அரசக்குரிசிலாய்த் தோன்றி, யரசாட்சி புரிகையில், தனக் குத்தானே "தியாகராசன்" என்னும் திருநாமத்தை ஏற்றுக் கொண்டதாக ஏற்படுகின்றது,

ஒப்புயர்வற்றதும், நித்தியமாய் நிலைபெற்று விளங்குவது மாகிய சிவபோகத்தைத் தியாகம்செய்து, கால, தேச பரிச்சேதங் களையுடையதும், விவகாரத்திற்குட்பட்டதுமாகிய ராஜபோகத்தை மேற்கொண்ட காரணத்தால் தியாகராஜனென்னும் திருநாமம் ஆரூரண்ணலுக்கு ஏற்பட்டதெனக் கூறுதல் பொருத்தமுடையதே யாகுமென்பதில் யாதோராக்ஷேபணையுமின்று.

சங்கா சேவகச்சோழனுக்கு வரமளித்த வண்ணம் திருவா ரூர்ச்சிவபெருமான் செங்கோல் செலுத்தி வரும்போது பற்பல அரசர்க்கு அறிக்கை விடுகையில் "தியாகராஜன்" என்று கையெ ழுத்திட்ட காரணத்தால் அத்திருநாமம் அப்பொழுது ஏற்பட்டி ருக்கலாமென ஊகித்தோமல்லவா? இதுவும் பொருத்தமுடைய தாகத் தோன்றவில்லை. ஏனெனின்,

அணிதிகழ்யா மரசிலமர்ந் தபயனெனப் பொலிந்துபதி
ஞரூண் டெல்லைத்

துணிவரிய பேரருளின் முழுதுலகுட் புரந்தருளச்
சமைந்து செல்வேன்
கணியரசு புரிபொழுதுந் தியாகேச ரெனும் பெயரே
நாமம் வேறில்.

என்னும் ஆரூரண்ணலது திருவாக்கால், சோழராஜ்யத்தை ஏற்றுக்கொள்வதற்கு முன்னேயும், தனக்குத்தியாகராஜனென்னும் பெயர் இருப்பதாகத் தெரிகின்றது.

முசுகுந்த ஸஹஸ்ரநாமாக்களில், முதல் நாமம் ஸ்ரீ தாஂமராஜ ஹாராஜாய நம: என்றுள்ளது, இதன் பொருள் "மஹாராஜனாயிருந்து இப்பூவுலகாண்ட ஸ்ரீ தியாகராஜாவுக்கு நமஸ்காரம்" என்பதாகும்.

மேற்படி முசுகுந்த ஸஹஸ்ர நாமாக்களில் ஸ்ரீ தியாகராஜப் பெருமானது ஸ்வரூபதத்துவத்தையும் வைபவத்தையும் குறிப்பிடும் சிலநாமாக்கள் பொருள் விளக்கத்தோடு ஈண்டு விமர்சிக்கப்படுகின்றது.

1. ஸ்ரீ ஹிரண்யஸிம்ஹாஸநேஶ்வராய நம:

நான்முகப்பிரமன், விஷ்ணு முதலிய காரியப்பிரஹ்மங்களாலாய கனக, ரத்தின ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்து விளங்கும் ஈசனுக்கு நமஸ்காரம்.

2. ஸ்ரீவித்யாகூடஹ்ருதயாய நம: ||

ஸ்ரீவித்யாஸ்ரூபிணியாகும் சித்சக்திவிளங்கும் ஸ்ரீசக்கரம் எந்தவொருபரசிவனது ஹ்ருதயத்தில் மறைக்கப்பட்டிலகுமோ அவனுக்கு வணக்கம்.

3. ஸ்ரீவித்யாஸ்வரூபஸம்பூர்ணவைபவாய நம: ||

ஸ்ரீவித்தையென்பது பஞ்சதசாக்ஷரீமஹாவித்தையாகும். அது மூன்றுகண்டங்களோடிலகுவது. அவை, வாக்பவம், காமராஜம், சக்தியென்பனவாம்.

வாக்பவகண்டம்-சிவஸ்வரூபம்
சக்திகண்டம்-சித்சக்திரூபம்
காமராஜகண்டம்-ஸ்கந்தவடிவம்.

ஆகவே, ஸோமாஸ்கந்த ஸ்வரூபம் மூன்றுகண்டங்களோடு கூடிய ஸ்ரீவித்யாபஞ்சதசாக்ஷரீவித்யாஸ்வரூபம் ஆகும். இத்தகைய ஸோமாஸ்கந்தமூர்த்திக்கு வணக்கம்.

4 ஶ்ரீயாரககமலமத்யஸ்த ஹ்ருத்கமலவாஸஸோமாஸ்கந்தாய நம:॥

ஹ்ருதய கமலத்தில் அதிஷ்டித்துள்ள ஸ்ரீதியாகராஜாது நீட்டியவலது திருத்தாள் மூலாதார சக்கிரத்தில் குண்டலினி சக்தியின்மேல் வைக்கப்பட்டிருக்கிறது. இங்ஙனம் அமைந்துள்ள உத்தரபாதத்தையுடைய தியாகராஜாவுக்கு நமஸ்காரம்.

5. ஸ்ரீஸஹஸ்ராரபத்மஸ்வரூபகமலாலயவாஸிதாய நம:॥

ஸஹஸ்ரார பத்மத்திற்கு அருள பத்மம் என்று பெயர். இதையே இருப்பிடமாயுடைய பரசிவனுக்கு நமஸ்காரம்.

6. ஸ்ரீநாராயணஹ்ருதயபாதபங்கஜாய நம:॥

லக்ஷ்மீபதியாகும் திருமாலின் ஹ்ருதய கமலத்தில் விளங்குபவனுக்கு நமஸ்காரம்.

7. சந்த்ரகலாஷோடசஸ்தம்ப ஸஹஸ்ரஸ்தம்பமத்யஸ்தாய நம:॥

சந்திரகலைகள் பதினாறும் பதினாறுகால்களாய் அமைந்துள்ள பதினாறுகால் மண்டபம். இம்மண்டபம் ஆயிரக்கால் மண்டபத்தின் மத்தியில் விளங்கும்; இந்த ஷோடச கலா மண்டபத்தின் மத்தியில் விளங்கும் சிவனுக்கு நமஸ்காரம்.

8. தேவாச்ரயஸஹஸ்ரஸ்தம்பமண்டபமத்யஸ்தாய நம:

தேவாச்ரயமென்னும் திருநாமத்தையுடைய ஸஹஸ்ரஸ்தம்ப மண்டபத்தின் மத்தியில் விளங்கும் சம்புவுக்கு நமஸ்காரம்.

9 ஸஷ்டாத³ஸபுராணாய அஷ்டாத³ஸப்ரதிஷ்டி²தாய நம꞉॥

பதினெண் மஹாபுராணங்களாகும் சப்தராசியின் லக்ஷ்யார்த்தஸ்வரூபமாய் விளங்கும் சிவத்திற்கு வணக்கம்.

10 ஸஷ்டாவிம்ஸதிதம் த்ராத்³ரமஹாகாமேஸ்வராஸநாய நம꞉॥

இருபத்தெட்டு பீஜாக்ஷரங்களோடு கூடிய மஹாஷோடஷீ மந்த்ரமே ஆஸனமாய் அமைய அதன்மேல் அதிஷ்டித்து ஒளிரும் காமகாமேஸ்வர வடிவ ஸோமாஸ்கந்த மூர்த்திக்கு நமஸ்காரம்.

11. ஸஞ்சதுஷ்கலாகுட்யஸம்ஹித ஸபாமந்த்ரஸ்தி²தாய நம꞉ ॥

நிவ்ருத்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி சாந்த்யதீதை யென்னும் ஐந்து கலைகள், இவற்றுள் நான்கு சுவருகளாகவும் ஒன்று மேற்பரப்பாகவும் அமைந்துள்ள ஸபா மந்திரத்துள் உள்ள ஸபாபதிக்கு நமஸ்காரம்.

12. விடங்கவிஷ்ணுஹ்ருதய நிவாஸோத்ஸுகதாய நம꞉ ॥

பேரழகோடு கூடிய மஹாவிஷ்ணுவின் ஹ்ருதய புண்டரீகத்தில் வஸிக்க உத்ஸாஹங்கொண்ட சிவத்திற்கு நமஸ்காரம். விடங்கர்—யாவரும் விரும்பத்தக்க பேரழகையுடையவர்.

13. ஸஜபாநடனப்ரியாய நம꞉ ॥

அஜபா நடனத்தில் பிரியமுள்ளவனுக்கு வணக்கம்.

14. ஸஜ்ஞாநதிமிர த்யாகமவிஜ்ஞாநவேத்³யாய நம꞉ ॥

அஞ்ஞானமாகும் பேரிருட்டைத் தியாகம் செய்யின், விசேஷமான தத்துவஞானம் ஸ்புரிக்கும். இந்த ஸவிசேஷ தத்வஞானத்தினல் அறியாமல் உணரப்படும் நிர்விசேஷ பரசிவத்திற்கு வணக்கம்.

15. த்யாகவைபவ ஸம்யுக்த த்யாகராஜவிராஜிதாய நம꞉ ॥

"உண்மைச் சிவபக்தர்கள் எதையெதை விரும்பினலும் அதையதைத் தடையின்றி அருள்வோம்" என்பது வள்ளல்

தன்மை. இந்த வள்ளல் தன்மையாகும் வைபவமே ஆரூரண்ண லுக்குத் துவஜமாகும்; தியாகத்துவஜம் ஸதாவிளங்கும் கமலாலயப் பிரபுவிற்கு நமஸ்காரம்.

16. ஷட³த்⁴வபரீதாத்மஸாரஜாதநவப்ரஸூநாய நம:

ஆறு அத்வாக்களுக்கு அப்பால் அவற்றிற்கு அதீதமாய் விளங்கும் பாதார விந்தத்தையுடைய சிவனுக்கு வணக்கம்.

வர்ணம், பதம், மந்த்ரம், கலா, தத்வம், புவனம் என்பன ஷடத்துவாக்கள். இவற்றிற்கு அதீதமாய் விளங்குவது சிவபதம்.

17. பஞ்சப்³ரஹ்மஷட³ங்கா³தி³பரீதாத்மபத்³மப்ரஸூநாய நம:॥

ஈசான மூர்த்தம் (சிரஸ்ஸு) தத்புருஷ வக்த்ரம், அகோரஹ்ருதயம், வாமதேவ குஹ்யம். ஸத்யோஜாதமூர்த்தி இவை ஐந்தும் பஞ்சப்பிரஹ்ம மந்த்ரங்கள். ஹ்ருதயம், சிரஸ்ஸு, சிகை கவசம், நேத்திரம், அஸ்த்ரம் இவை ஆறும் ஷடங்கங்கள். ஆதியென்னும் பதத்தினால் ஆத்ம, வித்யா சிவதத்வங்களையும் நிவ்ருத்தி, பிரதிஷ்டை முதலிய ஐந்துகலைகளையும், பிருதிவி முதலிய முப்பத்தாறு தத்துவங்களையும் கொள்ளல் வேண்டும் இவற்றிற்கு அதீதமாய் விளங்கும் சரண கமலத்தையுடைய சிவனுக்கு வணக்கம்.

18. கலாஷோட³ஶகாதீதநாதா³ந்தவிக்³ரஹாய நம:॥

ஓம் என்னும் பிரணவ நாதத்தில் பதினாறு கலைகள் இருக்கின்றன. அவை அகாரம், உகாரம், மகாரம், பிந்து, அர்த்த சந்திரன், ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, வியோமரூபிணி, அனந்தா, அநாதை, அநாசிருதை, ஸமனா, உன்மனீ யென்பனவாம். இவையாவும் நாதத்தில் அடங்குவன. இவற்றிற்கு அதீதமாய்க் கற்பிக்கப்பட்ட ஒரு ஸ்வரூபத்திற்கு வணக்கம்.

19. உச்ச்²வாஸநிச்ச்²வாஸஸம்விதாய நம:॥

எங்கும் வியாபகமாய், அதனால் நிச்சலமாயுள்ள பாசிவம்

ஹ்ருதய குஹையில் விளங்கும்போது உள்ளுக்கிழுக்கும் மூச்சி னாலும் வெளிவிடும் மூச்சினாலும் அசைகின்றது. இந்த அசை விற்கு அஜபாநடனமென்று பெயர். இந்த அஜபா நடேச மூர்த் திக்கு நமஸ்காரம்.

20 பஞ்சாசத்வர்ணரூபஜ்யோதி: ப்ரஹ்மசப்தமயமூர்த்தாய நம: ॥

அகாராதி மாத்ருகைகள் ஐம்பதும் பிரகாச வடிவினவை. மாத்ருகைகளின் ஒளிக்கிரணமண்டலத்தின் நடுவில் விளங்கும் சப்தபிரஹ்ம வடிவ சிவத்திற்கு நமஸ்காரம்.

21. சுத்தபஞ்சாக்ஷரஜ்யோதிர்விமர்சானந்தவிக்ரஹாய நம: ॥

"நமஶ்ஶிவாய" என்பது சுத்த பஞ்சாக்ஷரம். இது அகண் டஞானத்தையுணர்த்தலால் பிரகாச வடிவினதாகும். சுத்த பஞ் சாக்ஷரப் பிரகாசத்துள் விமர்ச வடிவ ஆநந்தஸ்வரூபமே ஆகாரமா யுடைய சிவத்திற்குவணக்கம்.

22. ஸப்தகோடிமஹாமந்த்ரஜநகாய நம: ॥

எழுகோடி மஹாமந்த்ரங்களும் எந்த பரசிவத்தினின்று தோன்றினவோ அதற்குநமஸ்காரம்.

23. மந்த்ராதிஷ்டானசிவாய நம: ।

ஸப்த கோடி மஹாமந்த்ரங்களுக்கும் அதிஷ்டான வடிவ சிவத்திற்கு வணக்கம்.

24. ஹம்ஸமந்த்ரஸ்வரூபமஹாஹம்ஸத்வயாத்மஸந்தர்சனாய நம: ॥

ஹம்ஸ மந்த்ரமென்பது ஆத்ம மந்த்ரமாகும். ஜீவாத்மா, பரமாத்மாவென ஆத்மா இருவகைப்படும். ஜீவாத்மா குண்ட லினீ ரூபமானது. இந்த குண்டலினீ சக்தி மூலாதாராதி ஷட் சக்கிரங்களையும் அங்கங்களாயுடையது. இவற்றுள் விளங்கும்

பிரகாச வடிவ சிவம் உஸ்வாஸ நிஸ்வாஸங்களாகும் ஹம்ஸங்களின் வித்தியாஸத்தினால் நடனம் செய்யும். இத்தகைய ஹம்ஸ நடனத் தியாகேசனுக்கு நமஸ்காரம்.

25. த்ரிபுவநமஹாஸம்வித்ப்ரதீப்த ஸ்வதேஜோஜ்வலாய நம: ॥

பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம் ஆகிய மூன்று லோகங்களையும் பிரகாசிக்கச்செய்வதாயும் விறகில்லாமலே ஸதா கொழுந்துவிட்டெரியும் ஞானாக்கினி வடிவ பரசிவத்திற்கு நமஸ்காரம்.

சிதக்கினி மூலாதாரத்திலுள்ளது. அக்கினி மண்டலம் பூலோகம். இதில் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம் என்னும் இரண்டு சக்கரங்கள் அடங்கியன. ஸூர்ய மண்டலம் புவர் லோகம். இதில் மணி பூரகமும் அநாஹதமும் அடங்கியன. சந்திர மண்டலம் ஸுவர்லோகம். இதில் விசுத்தியும் ஆக்ஞையும் அடங்கியன. சிவாக்கினி மூன்று லோகங்களையும் பிரகாசிப்பித்து லோகாதீத ஸஹஸ்ராரத்தில் விஸ்ராந்தியடைகின்றது. இத்தகைய சிதக்கினி வடிவ சிவத்திற்கு நமஸ்காரம்.

26. வத்ஸீக்ருதக்ருதாந்த ஸ்வயமக்ரூரீக்ருதாய நம: ॥

ஈசன் பசுவாயும் இயமன் கன்றாயும் தோன்றி மநுச்சோழனுடைய, அறநெறி தவறாச் செங்கோன்மையை உலகறியச்செய்த திருவிளையாடல் இதில் ஸூசிப்பிக்கப்படுகின்றது. பசுங்கன்றாய் வந்த எமனைத் தேரின் சக்கரத்தில் மடியச்செய்த சிவனுக்கு வணக்கம்.

ஈசன் பசுவாகி யேமனிளங் கன்றாகி
வீசு புகழாரூர் வீதிவந்தா ரம்மானே;
வீசு புகழாரூரின் வீதிவந்தா ராமாகில்
காசளவு பால்தான் கறக்குமோ வம்மானே;
கன்றையுதை காலி கறவாதே யம்மானே.

என்னும் மூவரம்மானைச் செய்யுள் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

27. அ,நபாயஸஹீவாமுஹத்திவூகூடிமொநூூஷீதாயநமः ॥

சங்கர சேவக அநபாயனுக்குப் புத்திரப் பேறருளி, அவ் னுடைய அப்புத்திரன் நரசிங்கச்சோழன் வேட்டையாடுகையில் ஒரு புலியால் கொல்லப்பட்டபோது, சோழராஜ்யத்தை யேற்றுக் கொண்டு நரசிங்கச்சோழன் மகன் சிவதத்த சோழன் பதினறுண் டெய்தும் வரையில் ஆரூராண்ணல் செங்கோல் செலுத்தி வந்த னன். இத்திருவிளையாடல் அநபாயனது உழுவலன்பை யொளிர் விக்கின்றது. "அன்பு வலையிற் படுவோன் காண்க" இத்தகைய வள்ளலுக்கு வணக்கம்.

28. வாடிமூஉமூநிமூயாயநமः ॥

கமலாலய க்ஷேத்திரத்தின் ஸ்தல விருக்ஷம் பாதிரி மரம்; இதன் அடிப்பாகத்தையே வாஸஸ்தானமாயுடைய சிவனுக்கு நமஸ்காரம்.

29. உ-ஷடூாஸஉ-நிநாகூ-ஷூலா,மஉாஅஷநவ-மூஜிதாய

நமः ॥

குரோத பட்டாரகரென்னும் துர்வாஸ மஹர்ஷியால் இயற் றப்பட்ட சிவாகமார்ச்சனையால் பூஜிக்கப்பட்ட பரசிவத்திற்கு நமஸ்காரம்.

30. கு-ஂகு-உாஂஸிதவாஉாயநமः ॥

குங்குமத்தினல் பிரகாசிக்கப்பட்ட பாதாரவிந்தமுடைய சிவனுக்கு நமஸ்காரம். இதனல் ஸ்ரீ தியாகராஜப்பெருமானுக் குக் குங்குமத்தினலும் அர்ச்சனை செய்யலாமென்பது பெறப்படு கின்றது.

31. ஞூநஂஉநூதவாூவாரஸ்ஂஉமளஸீஸஉநிதாயநமः ॥

வியாபார ரகிதனையும், நிச்சலனையும் நிஷ்கிரியனையுமுள்ள பரசிவனை ஆநந்திக்கும்படி ஸ்கந்தனும், நடிக்கும்படி கௌரியும்

செய்கின்றனர். இங்ஙனம் செய்யும் உமையோடும், ஸ்கந்தனோடும் விளங்கும் ஸோமாஸ்கந்த மூர்த்திக்கு நமஸ்காரம்.

32. சமத்காரநிருபோத்ஸவ பக்த்யுத்கர்ஷாவிர்ப்பூதாசலேச்வராய நம: ||

சமத்காரனென்னும் அரசனுடைய சிறந்த பக்தியின் உத்கர்ஷத்தினால் ஆவிர்ப்பவித்த அசலேச்வரனுக்கு நமஸ்காரம்.

33. ஹாடகக்ஷேத்ர நாயகாய நம: ||

திருவாரூருக்கு ஹாடக க்ஷேத்திரம் என்று பெயர். இத்தலத்தில் விளங்கும் ஹாடகேச்வரனுக்கு நமஸ்காரம்.

34. வஜ்ரமௌளிவேஹூவம்ஸத்ருவஜாதி விஷ்ணுபரிசோபிதாய நம: ||

ஒரு காலத்தில் தேவர்களும் திருமாலும் கூடி குருக்ஷேத்திரத்தில் நீண்டகாலஞ் செய்து முடிக்கத்தக்க ஓர் யாகத்தைத் தொடங்கினர். தேவர்கள் யாவரும் அதைச்செய்து முடிக்காமல் வருந்தி நிற்கத் திருமால் அதைச்செய்து முடித்து வெற்றி பெற்றனர். "யாவரினும் யானே உயர்ந்தவன்" என்று திருமால் செருக்கடைந்தனர். இதனை அடக்கச் சிவனருளால் அவ் வியாக குண்டத்தினின்றும் ஒரு வில் தோன்றிற்று. அதனை யெடுத்து வளைத்துத் திருமால் எல்லாத் தேவர்களையும் அடக்கியாள நினைத்து அவர்களைத் துரத்திக்கொண்டு போய்க் கடைசியில் பராசக்தி பீடமாகும் கமலாலயத்தை யடைந்தனர். பராசக்தியாகும் கமலாம்பிகையின் இன்னருளால் திருமால் வலிவற்று அயர்ந்து; அவ்வில்லைத் தரையிலூன்றிக்கொண்டு அதன்மேல் தன் தலையைச் சாய்த்துக்கொண்டு தூங்கிவிட்டனர். இதனையறிந்த தேவர்கள் தமது குருவாகும் பிரஹஸ்பதியின் சொற்படி அவ்வில்லின் கீழ் புற்றுருவங்கொண்டு நின்றனர். இந்திரன் செல்லுருவங்கொண்டு வில் நாணையரிக்க, வில் நாண் அறுபட்டு அவ்வேகத்தினால் திருமாலின் சிரம் தெறித்தது. தேவர்கள் நடுநடுங்கி நிற்க, [illegible]

அப்புற்றிடங்கொண்ட புதிதனுய்த்தோன்றித் திருமாலை யுயிர்ப்பித்துத் தேவர்களாலும் திருமாலாலும் பூசிக்கப்பட்டனர். இவர் தான் வன்மீகநாதர். இவருக்கு நமஸ்காரம்.

35. க்ஷீரஸாகரவைகுண்டஶ்ரீவிஷ்ணுஸ்வாத்மபூஜிதாய நம: ||

திருப்பாற் கடலில், வைகுண்டத்தில், மஹா விஷ்ணுவால் தனது ஆத்மஸ்வரூபமாக (அஹங்கிரஹ உபாஸனையால்) பூஜிக்கப்பட்ட பரமாத்மாவுக்கு நமஸ்காரம்.

36. ஷட்சதாதிகவிம்ஶதிஸஹஸ்ரோச்ச்வாஸஜபாந்விதாய நம: ||

இருபத்தோராயிரத்து அறுநூறு அஜபா ஜபங்களோடு கூடி அவற்றிற்கு அதிஷ்டானமாய் விளங்கும் பரசிவத்திற்கு நமஸ்காரம்.

37. பல்குந்யஜபாஸீநதாண்டவாடம்பரோத்ஸுகாய நம: ||

பங்குனியுத்திர நாளில் அஜபையாகும் ஹம்ஸத்தில் அமர்ந்து தாண்டவம் செய்வதில் பிரீதியுடைய சிவனுக்கு நமஸ்காரம்.

38. ஹஸ்தாதிபல்குநீப்ராந்தமஹாதிவ்யோத்ஸவாய நம: ||

ஹஸ்த நக்ஷத்திரத்தில் துவஜாரோஹணம் செய்து உத்திர நக்ஷத்திரத்தில் தீர்த்தவாரியாகும் இருபத்தேழுநாள் மஹோத்ஸவம் திருவாரூரில் நடக்கின்றது. இருபத்தி நான்காவது நாளாகிய ஆயில்ய நக்ஷத்திரத்தன்று ரதோத்ஸவம் நடைபெறும். இங்ஙனம் நடைபெறும் இப்பெருவிழாவிற்குப் பல ரஹஸ்யார்த்தங்களுண்டு இப்பெருவிழாவில் ஸப்தவிம்சதி (27) ரஹஸ்யக்கிரம பூஜை நடத்தல் வேண்டும். இவற்றின் விமர்சம் ஸ்ரீவித்யா தந்த்ரங்களில் மிக விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இத்தகைய மஹோத்ஸவத்தைக் கண்டருளும் தியாகராஜாவுக்கு நமஸ்காரம்.

39. அநுக்ரஹபராசக்திலீலாஸமரஸாநந்தரூபாய நம: ।

அநுக்கிரஹம் செய்யும் பராசக்தியின் லீலையோடு ஸமரஸப்பட்டுவிளங்கும் ஆநந்தஸ்வரூப சிவத்திற்கு நமஸ்காரம்.

40. வீரஸிம்ஹாஸநாரூடாய நம: ।

வீரஸிம்ஹாஸனத்தின்மேல் ஆரோஹணித்துள்ள சிவனுக்கு நமஸ்காரம். சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங்களுக்கு அதீதமாய் தானே தானாய் விளங்கும் நிலைக்கு வீரஸிம்ஹாஸனமென்று பெயர். இந்நிலை தத்துவஞானத்தாலன்றி கூடாதாகையால் வீரகட்கங்கள் இதற்கு அடையாளங்கள் ஆகும்.

41. விராட்ஹ்ருதயபத்மஸ்தாய நம: ॥

விராட்ஸ்வரூபருடைய ஹ்ருதய புண்டரீகத்தில் அதிஷ்டிதராயுள்ள மஹேச்வரருக்கு நமஸ்காரம்.

42 மூலாதாரபத்மவஹ்நிகநாதாய நம:

விராட்டினுடைய மூலாதார பத்மத்தில் விளங்கும் வஹ்நீகேச்வரருக்கு வணக்கம்.

43. அநாச்ரிதாதிகாலாக்நிருத்ராந்தபுவநாதிபாய நம:

அநாச்ரிதை முதல் காலாக்கினி ருத்ரம் வரையுள்ள இருநூற்று இருபத்துநான்கு புவனங்களுக்கும் அதிபனாகும் சிவனுக்கு வணக்கம். இப்புவனங்கள் யாவும் நிவர்த்யாதி பஞ்ச கலைகளில் அடங்கியவை.

நிவர்த்தி கலையில் 108ம், பிரதிஷ்டா கலையில் 56ம், வித்யா கலையில் 28ம், சாந்தி கலையில் 17ம், சாந்தியதீத கலையில் 15ம் அடங்கும். இவற்றைப்பற்றி விசேஷமாய் அறிய விரும்புவோர் சைவாகமங்களில் ஷடத்துவாப்பிரகரணத்தைப் பார்க்கவும்.

44. [illegible] நம:

மூலாதாராதி ஆறு சக்கிரங்களால் கவசம் செய்யப்பட்டு மறைந்திருக்கும் சிவனுக்கு நமஸ்காரம்.

45. [illegible] நம:

மூலாதாரம் முதல் உன்மனாந்தம் வரையுள்ள பன்னிரண்டு ஸ்தானங்களில் விளங்கும் சிவனுக்கு நமஸ்காரம்.

மூலாதாரம், ஹ்ருதயம், ஆக்ஞை, பிந்து, அர்த்த சந்திரன், ரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமனு, உன்மனீ, என்பவை பன்னிரண்டு ஸ்தானங்களாகும்.

46. [illegible] நம: ||

வாக்பவம், காமராஜம், சக்தியென்னும் மூன்று பீஜங்களை அதிஷ்டானமாய்க்கொண்ட சிவத்திற்கு நமஸ்காரம்.

47. [illegible] நம:

ஆறு விதமான ஐக்கியங்களை அநுஸந்தானம் செய்யும் ஸத்குருவால் அறிவிக்கப்பட்ட சிவத்திற்கு நமஸ்காரம். ஆறு விதமான ஐக்கிய பாவனைகளாவன :—குரு, மந்த்ரம், சக்கிரம் பிரபஞ்சம், தேவதை-உபாஸகன்-இவற்றுள் ஸமமாய்த் தோன்றும் ஏக பாவனையே அறுவித ஐக்கியமாகும்.

48. [illegible] நம: ||

முந்நூற்றறுபது லீலைகள் புரிவதற்காக கற்பித்த சரீரத்தையுடைய தியாகராஜமூர்த்திக்கு நமஸ்காரம்.

49. [illegible] நம:

வீதிவிடங்கனென்னும் திருநாமத்தையுடைய தியாகராஜருக்கு வணக்கம்.

50. 𑌪𑌤𑌞𑍍𑌜𑌲𑌿𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌪𑌾𑌦𑌮𑍁𑌨𑌿𑌮𑌾𑌨𑌸𑌹𑌂𑌸𑌾𑌯 𑌨𑌮𑌃 ‖

பதஞ்ஜலி வியாக்கிரபாதர் என்னும் முனீஸ்வரர்களின் மனமாகும் தடாகத்தில் வஸிக்கும் ஹம்ஸரூபமாகும் சிவனுக்கு நமஸ்காரம்.

51. 𑌮𑌹𑌾𑌕𑌾𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑍀𑌵𑌲𑍍𑌲𑌭𑌾𑌯 𑌨𑌮𑌃 ।

மஹாகாமேஸ்வரிக்கு நாயகனாகும் ஸ்ரீ தியாகராஜ மூர்த்திக்கு நமஸ்காரம்.

52. 𑌶𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑌾𑌗𑌰𑌾𑌜𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃

மஹேஸ்வரனாகும் ஸ்ரீ தியாகராஜமூர்த்திக்கு நமஸ்காரம்.

மஹேஸ்வரன் = எவன், வேதங்களின் ஆதியில் பிரணவ வாச்சியனும், வேதாந்தங்களாகும் உபநிஷத்துக்களில் பிரதிஷ்டிதமான லக்ஷ்யார்த்தஸ்வரூபனும், பிரக்ருதியாகும் சுத்தமாயையின் லயஸ்தானமாயும் விளங்குகிறானோ, அவனே பரமேஸ்வரன்.

இங்ஙனம், மேற்கூறிய சில நாமாக்களால் ஸ்ரீ தியாகராஜ மூர்த்தியின் ஸ்வரூபதத்துவமும் மஹிமையும், கமலாலய க்ஷேத்திர வரலாறும் மாஹாத்மியமும் ஒருவாறு புலப்படுவது அறியத்தக்கது.

குறிப்பு :—மேற்கண்ட ஐம்பத்தொரு நாமாக்களையும் அ முதல் க்ஷ வரையிலுள்ள ஐம்பத்தோரக்ஷரங்களைச் சேர்த்து அர்ச்சனை செய்யின் அபீஷ்டம் ஸித்தியெய்துவர் என்பது பெரியோரது கருத்தாகும்.

ஸ்ரீமுசுகுந்த ஸஹஸ்ரநாம கர்ப்பித மாத்ருகாக்ஷர

நாமாவளி

முற்றிற்று.

---

# ஸ்ரீ தியாகராஜ நவமணி மாலை.

---

(1) ஸ்ரீஅக்ராங்கிதவக்ஷஸம்ஶ்ரிதஜநாநயெஃஹவம்தாநதம் ।
ஸ்ரீஅக்ரஹ்ஷிதவிம்தூஜஸ்யவஸ்திம்தாருமெஸ்வராவ்யம்
ஶிவம் ।
ஸ்ரீஅக்ராஜ்பமதாம்பஜஜஹூவிஸதஹஸ்தாவநீவஸ்தூதம் ।
ஸ்ரீஅக்ராகாரதிவிஸ்வரம்மவஷநடம்வம்தைஜமக்தாரணழ ॥

(இதன்பொருள்) ஸ்ரீ அக்கிரத்தினால் அலங்காரம்செய்யப்பட்ட வக்ஷஸ்தலத்தை (மார்பை) யுடையவனும், தன்னை ஆச்ரயித்த பக்தர்களின் ஆபத்தாகும் யானைக்கூட்டத்திற்குச் சிங்கமபோன்றவனும், ஸ்ரீசக்கிரத்தில் உள்ள பிந்துவின் மத்தியில் விளங்குபவனும், சக்கிரம, சங்கம், கதை, தாமரைப்புஷ்பம் இவைகளை கைகளில் தரித்துள்ள விஷ்ணுவால் பூஜிக்கப்பட்டவனும, ஸ்ரீசக்கிர வடிவ பிரபஞ்சவரங்கின் (நாடகமேடையின்) மேல் நடிப்பவனும். ஸர்வ ஜகத்காரணனுமான ஸ்ரீ தியாகராஜரை வணங்குகின்றேன்.

(2) தாருமெபம்ஜஅகம்தஹவெதிநதம்
மொஹாம்யகாராரணழ ।
நாமெபாயிஜகம்தஹ்ரஸ்தரவிஜெ
நருத்தம்கரம்ஜீஜயா ।
நாமெபாத்ஹவாவதிம்நதவரா
யீபாதிதெவம்நஃ ।
ஹொமீபம்கஜருராருயஸ்ஜர
நைஜஷ்ருதிபொயாத்வயெ ॥

(இ ன) முசுகுந்த சக்கிரவர்த்தியால் வணங்கப்பட்டவனும், மோஹமாகும் பேரிருளுக்குச் சூரியனைப்போன்றவனும், அரவணையில் துயிலகொள்ளும மஹாவிஷ்ணுவின் ஹ்ருதயகமலத்தில் லீலையாகநடனம செய்பவனும், பர்வதராஜகுமாரிக்குப்பதியும், இந்தி

ரன்முதலிய ஸகலதேவர்களாலும் வணங்கப்பட்டவனும், ஸகல விதமான போகங்களுக்கும் ஈசனும், கமலாலயத்தில் நிலைபெற்று விளங்குபவனும், உத்பத்தி நாசரஹிதனும் ஆன ஸ்ரீதியாகராஜனைப்பரிசுத்தமான ஆத்மபோதத்தின்பொருட்டு வணங்குகிறேன்.

(3) முக்தாவித்ரும முக்யரத்நகசிதே
ஸிம்ஹாஸநே ஸம்ஸ்திதம் ।
பக்தாக்ரேஸர சோழபூப மஹிதம்
முக்திப்ரதம் தேஹிநாம் ।
முக்தாக்ரேஸர சித்தபங்கஜமுக
ஹம்ஸஸ்வரூபம் சிவம் ।
ரக்தாநாம் விஷயேஷு ஸௌக்யதம்
ஸ்ரீத்யாகராஜம் பஜே ॥

(இ-ள்) முத்து, பவழம் முதலிய நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஸிம்மாஸனத்தின்மேல் வீற்றிருப்பவனும், பக்தர்களிற் சிறந்த சோழமஹாராஜாவினால் பூசிக்கப்பட்டவனும், பத்த ஜீவர்களுக்கு மோக்ஷத்தையருள்பவனும், ஜீவன்முக்தர்களிற் சிறந்த வரிஷ்டர்களின் ஹ்ருதயகமலத்தில் ஹம்ஸரூபமாய் விளங்குபவனும், விஷய இன்பங்களில் பற்றுடையவர்க்குப் பிரபஞ்ச சுகத்தை யருள்பவனுமுள்ள சிவஸ்வரூப தியாகராஜனைப் பஜிக்கின்றேன்.

(4) ஸாம்பம் ஸோமஸமப்ரபாஸ்வர தநும்
ஸ்ரீவீரவக்த்ராந்திதம் ।
பிம்பாதாயுத பிம்பபிம்பவிலஸத்
ஹாஸம் கராம்போஜகம் ।
கம்போஜாதி தத்தஹாய தாம்பக ஸஹம்
காம்போஜ வேஷ்டும் ।
ஸம்ஹாரம் ஸ்ரீவாமாஸம்ஸ்திதம் ஸத்யதிஹ பஜே
ஸ்ரீத்யாகராஜாதிபம் ॥

(இ-ள்) அபின்னையாகும் அம்பாளுடன் கூடியவனும் தனது இருபுறங்களிலும் இலங்கும் வீரகட்கங்களோடு கூடியவனும். கோவைப்பழம்போல் சிவந்த உதடுகளையுடையவனும், சந்திரகலையைச் சிரசில் தரித்தவனும், குலபத்மத்தில் விளங்குபவனும், தாமரையிதழ்போன்ற கண்களையுடையவனும், கலசோத்பவராகும் அகஸ்தியரது அபீஷ்டங்களையருளினவனும், திருவாரூரென்னும் ஸ்ரீபுரத்தில் விளங்குபவனும், சம்புவுமான ஸ்ரீ தியாகராஜனை வணங்குகின்றேன்.

(5) காழாபாமதபாழசாரா-தஸரா
ஸகூஸ்திஸ்தஂஸஉா ।
ஹெழாஷெஸாஜிதஷஸாஂகழிஹாஂ
காரா-ணூவாராஂநியிஂ ।
கூஒழஸ்ரீகஉழாழபஸூஸததஂ
வெழஂதஉஂதஉஉஉ ।
ஞாழெயாஅழபா-ஹுஜெஅழஉமராட
ஜாஉாதராஂஹாவயெ ॥

(இ-ள்) மந்தமாய் வீசும் இளந்தென்றலில் பிரியமுடையவரும், சிருங்காரப்புன்னகையால்மன்மதனைஜெயித்தவரும், பாபத்தை போக்கடிப்பவரும், கருணைக்கடலும், கமலாலய தீர்த்தக்கரையில் ஸதா விளையாடுபவரும், பனிமலைபோல் வெண்மையான வஸ்திரத்தால் சோபிப்பவரும், பருவதராஜனுடைய மருமகனுமாக ஸ்ரீ தியாகேசனை எனது உள்ளத்தில் ஸதா தியானிக்கின்றேன்.

(6) ஸொஉாக்ஷஂஉஉஹஂபிவஂஸ-ஸ-ழஹஂ
கஹூாரஉாழாவியஂ ।
ஸொஉாஹாயரஸஜ்ஜவஷிக-ஸ-உ
க்ரூ-வஸ்தாடஂககஂ ।
ஸாஉாநீஷூஉநஂதகிஂகிணிஸழத
வாஉாரவிஂஉஷூயஂ ।

ஸீமாதீதக்ருபம் ஸ்வஹ்ருத்ஸம்புஜஜாதகே
ஸ்ரீத்யாகராஜம் பஜே ||

(இ-ள்) உமையோடுங் ஸ்கந்தனேடும் கூடிவிளங்குபவரும், மங்களஸ்வரூபியும், அதிஸுலபனும், செங்கழுநீர் மாலையில் பிரியமுடையவரும், சந்திரனையொத்த வெண்மைச் செவந்தி புஷ்பத்தாலாய தாடங்கமுடையவரும், ஸாமம், யஜுஸ்ஸு முதலிய வேதங்களால் போற்றப்படுபவரும், அநந்தன், வாஸுகி முதலிய ஸர்ப்பங்களைக் கிங்கிணிகளாகக்கொண்ட பாதாரவிந்தங்களால் விளங்குபவரும், எல்லையற்ற கருணையோடு கூடியவருமான ஸ்ரீ தியாகராஜனை என் ஹ்ருதய கமலத்தில் பஜிக்கிறேன்.

(7) நித்யம் வீதிவிடங்கநாமஸஹிதம்
ஸௌந்தர்யவாராந்நிதிம் |
ஶ்ரேஷ்டம் தம் விடராஜஸுந்தரமஹே
தௌத்யஸ்தம் பக்தப்ரியம் |
ந்ருத்யந்தம் ஹ்ருதி யோகிராஜமஜபா
ரூபேவாதக்ஷாம் ப்ராணிநாம் |
ஸத்யம் ஶிவஹிதங்கரம் பவாயநுதம்
ஸ்ரீத்யாகராஜாஹ்வயம் ||

(இ-ள்) நித்யஸ்வரூபனும், வீதிவிடங்கன் என்னும் திருநாமமுடையவரும், ஸௌந்தர்யக்கடலாய் விளங்குபவரும், விடர்களிற் சிறந்த ஸுந்தரமூர்த்தியவர்களுக்குத் தூதனானவரும், பக்தர்களுக்குப்பிரியமானவரும், யோகீஸ்வரர்களுடைய ஹ்ருதய கமலத்தில் அஜபாஸ்வரூபியாயிருந்து ஸதா நிருத்தியம் செய்பவரும், ஞானிகளால் போற்றப்படுபவரும் பிராணிகளுக்கு ஸுகத்தைச் செய்பவரும், ஆன தியாகராஜனென்னும் பெயருடைய ஸத்தியஸ்வரூப சிவனைத் தியானிக்கிறேன்.

(8) த்யாகேஶாங்கிதவஸ்த்ரஶோபிதகுடிம்
த்யாகத்வஜம் ஸவ்யகா |

வாகீஶாத்³யஸ்ஸுஸ்துதபதா³
கர்பூரராகோஜ்ஜ்வலம் ।
யோகீஶப்ரியகாரவல்லீ வசயபரீதம்
ஸத்³ப⁴க்தார்த்³ரிதை: ।
ஸங்கீ³தாதி³விநோத³மானஸிகம்
ஶ்ரீ த்யாக³ராஜம் ப⁴ஜே ॥

(இ—ள்) "தியாகராஜா" என்றுவரையப்பட்ட வஸ்திரத்தினால் விளங்கும் இடையையுடையவரும், வாகீசராகிய அப்பர் ஸுந்தரர், ஸம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகியநால்வரால் ஸதா ஸ்துதிக்கப்படுபவரும், பச்சைக் கற்பூரப்பூச்சைப் பிரியத்தோடு அணிந்து விளங்குபவரும், யோகிகட்குப்பிரியமான "பாகற்காய் பறித்தல்" என்னும் உற்சவத்தில் பிரியமுடையவரும், பக்தர்கள் அன்போடு மனமுருகிச்செய்யும் கானத்தைக்கேட்டுக் களிப்பவரும் ஆன ஸ்ரீ தியாகராஜரைப் பஜிக்கிறேன். (8)

(9) ஸ்வானந்தா³ப்³தி⁴ஶயானஸுந்த³ரதா
ஜ்ஞஸ்வாந்த: ।
ஸ்வானந்தை³கஸுநிஷ்டி²த: ஸ்வஸுகோ²ஹா
ஸாத்³ராஜ்யோஷ்ஸவக்ஷ: ।
ஸ்வானந்த³ம் நிஜஸேவயோ ஶங்கர
காரேணஸம்தத்³வான் ।
ஸ்வானந்தா³ம்பு³தி⁴பூர்ணசந்த்³ரோத³யம்
ஶ்ரீ த்யாக³ராஜம் ப⁴ஜே ॥

(இ—ள்) ஸ்வகீயாநந்தமாகும் திருப்பாற்கடலில் திளைப்பவர்களான மஹான்களின் அந்தரங்கத்தில் ரமிப்பவராயும், சிதாநந்தத்தை யருள்பவராயும், தனது நிஜாநந்தத்திலேயே எப்பொழுதும் இருப்பையுடையவராயும், ஸ்வஸ்வரூப பரமாநந்த வடிவ மோக்ஷத்தை யருளும் ஸத்குருவடிவமாய் விளங்குபவராயும், ஆநந்தக் கடலுக்குப் பூர்ணசந்திரவடிவினராயும் தோஷரஹிதராயும் விளங்கும் ஸ்ரீ தியாகராஜரைப்பஜிக்கின்றேன்.

ஸ்ரீ தியாகராஜநவமணிமாலை

முற்றிற்று.

---




*In memory of the late Sriman B. C. Avudaiappa Pillai Avl.*
*of Bikshandarkoil*

# ஸ்ரீ தியாகராஜாஷ்டகம்.

(1) [illegible]
[illegible]
[illegible]
𑌶𑍍𑌰𑍀 𑌤𑍍𑌯𑌾𑌗𑌰𑌾𑌜𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 ॥

(இ—ள்) செங்கழுநீர் புஷ்பமாலையால் அலங்கரிக்கப்பட்ட கண்டத்தையுடையவராயும், சந்திரகலையைச்சிரசின்மேல் அணிந்தவராயும், மஹாமேருவை வில்லாகத்தரித்தவராயும், விளங்கும் ஸ்ரீ தியாகராஜரே! உமக்கு நமஸ்காரம்.

(2) [illegible]
[illegible]
[illegible]
𑌶𑍍𑌰𑍀 𑌤𑍍𑌯𑌾𑌗𑌰𑌾𑌜𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 ॥

(இ—ள்) நல்முத்து, இந்திரநீலம் முதலிய நவரத்தினங்களாலிழைக்கப்பட்ட ஸிம்மாஸனத்தின்மேல் வீற்றிருப்பவரும் முத்துஸ்வாமிதீக்ஷிதர் அவர்களால் ஸ்துதிக்கப்பட்டவரும் ஆன ஸ்ரீ தியாகராஜரே உமக்கு நமஸ்காரம்.

(3) [illegible]
[illegible]
[illegible]
𑌶𑍍𑌰𑍀 𑌤𑍍𑌯𑌾𑌗𑌰𑌾𑌜𑌾𑌯 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 ॥

(இ—ள்) வானரமுகத்தோடுகூடிய முசுகுந்த சக்கிரவர்த்தியின் வேண்டுகோளால் இப்பூதலத்திற்கு வந்தவரும், அன்னமயமாதி பஞ்சகோசங்களுக்குள் அவற்றிற்கு விலக்ஷணமாய் விளங்குபவரும், குமாரனாகும் ஸ்கந்தனுக்குப் பிதாவானவருமான ஸ்ரீ தியாகராஜரே! உமக்கு நமஸ்காரம்.

(4) பஶ்வாதிநாம் பரிபாலகாய ।
ஸத்ஸு ஸதாம் ஶ்ரீபுர ஸம்ஸ்திதாய ।
ப்ரச்சந்ந காத்ராய குரூபமாய ।
ஶ்ரீ த்யாகராஜாய நமோ நமஸ்தே ॥

(இ—ள்) பசுஜனங்களை ரக்ஷிப்பவரும், ஸஜ்ஜனங்களுக்குரு ரூபமாய்வந்து அநுக்கிரஹம் செய்பவரும், தனது சரீரத்தை வெளிக்குக்காட்டாமல் மறைத்துக் கொண்டிருப்பவரும், ஸ்ரீபுரமென்னும் திருவாரூரில் ஸதாநித்திய ஸாந்நித்தியமாய் இருப்பவருமான தியாகராஜரே! உமக்கு நமஸ்காரம்.

(5) காந்தாதிஸௌந்தர்ய ரதஸ்திதாய ।
காந்தாஸமாஶ்லிஷ்ட கந்தராய ।
காந்தார்த்த ரூபாய கஜாஸ்ய பித்ரே
ஶ்ரீ த்யாகராஜாய நமோ நமஸ்தே ॥

(இ—ள்) மிக்க அழகுள்ள தேரில் விளங்குபவரும், பார்வதி தேவியால் ஆலிங்கனம்செய்யப்பட்ட கழுத்துடன் கூடியவரும், அர்த்தநாரீஸ்வரஸ்வரூப முடையவரும், சுஜானனனுக்குப் பிதாவானவருமான தியாகராஜரே உமக்கு நமஸ்காரம்!

(6) நிரந்தராப்யாஸ விஶேஷவேத்ய ।
போதஸ்வரூபாய நிரஞ்ஜனாய ।
நிரங்குஶாநந்த பதப்ரதாய ।
ஶ்ரீ த்யாகராஜாய நமோ நமஸ்தே ॥

(இ—ள்) இடைவிடாமல்செய்யும் அப்பியாஸ விசேஷத்தால் உணரக்கூடிய போதஸ்வரூபரும், அஞ்ஞானமற்றவரும் எல்லையற்ற அகண்டாநந்த நிலையையருளக்கூடியவருமான ஸ்ரீ தியாகராஜரே! உமக்கு நமஸ்காரம்.

(7) 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌜𑌰𑌾𑌜𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑌤𑍍𑌕𑌿𑌰𑍀𑌟
𑌰𑌤𑍍𑌨𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌾𑌸𑌿𑌤𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌾𑌯 ।
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌜𑌗𑍋𑌪𑌾𑌲𑌹𑍃𑌦𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌯 ।
𑌶𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑌾𑌗𑌰𑌾𑌜𑌾𑌯 𑌨𑌮𑍋𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 ॥

(இ—ள்) சக்கிரவர்த்திகளின் கிரீடங்களில் இழைக்குள்ள நவரத்தினங்களின் காந்தியால் ஒளிரும் சரணகமலங்களையுடையவரும், ராஜகோபாலனென்னும் மஹாவிஷ்ணுவின் ஹ்ருதயகமலத்தில் விளங்குபவரும் ஆன ஸ்ரீ தியாகராஜரே! உமக்கு நமஸ்காரம்.

(8) 𑌅𑌨𑌨𑍍𑌤𑌹𑍃𑌦𑌾𑌜𑌿𑌰𑌸𑌂𑌚𑌾𑌰𑌰𑍂𑌪
𑌨𑍃𑌤𑍍𑌤𑌂𑌕𑌰𑌾𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌰𑍂𑌤𑍍𑌤𑌮𑌾𑌯 ।
𑌅𑌨𑌨𑍍𑌤𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑍈𑌕𑌧𑌾𑌮𑍍𑌨𑍇 ।
𑌶𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑌾𑌗𑌰𑌾𑌜𑌾𑌯𑌨𑌮𑍋𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 ॥

(இ—ள்) அநந்தனுடைய ஹ்ருதயத்தில் அஜபாநடனம் புரிபவரும், ஆதிகுருமூர்த்தியும், அநந்தமான கல்யாணகுணங்களுக்கு இருப்பிடமுமான ஸ்ரீ தியாகராஜரே! உமக்கு நமஸ்காரம்.

(9) 𑌶𑍍𑌰𑍀𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌮𑌹𑌾𑌸𑍍𑌵𑌰𑍂𑌪
𑌶𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑌾𑌗𑌰𑌾𑌜𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌸𑌰𑍋𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑍇 ।
𑌅𑌨𑌨𑍍𑌤𑌬𑍋𑌧𑌪𑍍𑌰𑌦𑌮𑌷𑍍𑌟𑌕𑌾𑌖𑍍𑌯𑌂 ।
𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌂𑌸𑌮𑌾𑌹𑍃𑌤𑍍𑌯𑌮𑌯𑌾𑌰𑍍𑌪𑌿𑌤𑌂𑌹𑌿 ॥

(இ—ள்) சிதாநந்தத்தையருளும் குருரூபியாகும் ஸ்ரீ தியாகராஜமூர்த்தியின் சரணகமலங்களில். எல்லைபற்ற அகண்ட ஞானத்தைத்தரக்கூடிய இந்த அஷ்டகமென்னும் ஸ்தோத்திரம் அடியேனால் அர்ப்பணம் செய்யப்படுகின்றது.

ஸ்ரீ தியாகராஜாஷ்டகம்

முற்றிற்று.

## ஸ்ரீ கமலாலய க்ஷேத்திரதத்துவம்

## முற்றிற்று.

---

# முகவுரை

இங்ஙனம் "ஸ்ரீகமலாலய க்ஷேத்திர தத்துவம்" என்னும் நூல் வேதாகம சித்தாந்தங்களைத்தழுவி இயற்றப்பட்டது. இதில், சிவஸ்தான விசாரம், ஸ்ரீகமலாலய க்ஷேத்திரத்திற்குறிப திருநாமங்களின் விளக்கம், பஞ்சலிங்கங்களின் தத்துவம், ஸ்ரீதியாகராஜ ஸோமாஸ்கந்தரின் வரலாறும் தத்துவமும், அஜபாநடன தத்துவம் பஞ்சசக்திகளின் விமர்சம், ஸ்ரீதியாகேசன் அமர்ந்துள்ள மஹாமண்டபத்தின் தத்துவம், பக்தகாக்ஷி தேவக்காக்ஷிகளின் விமர்சம், ஸ்ரீதியாகராஜ லீலைகளின் தத்துவம், ஸ்ரீமுசுகுந்த ஸஹஸ்ரநாமத்தில் தியாகராஜரது தத்துவத்தையுணர்த்தும் சில நாமாக்களின் விமர்சனம் முதலியன அடங்கியுள்ளன: இன்னும் இத்திருத்தலத்தலத்தைப் பற்றிய பலதேவ ரஹஸ்யங்கள் உள. அவை ஸ்ரீகமலாம்பிகா மஹாத்மியத்தில் விமர்சிக்கப்படும்.

தடவரியா தனம்போற்றி கருணைபொழி முகம்போற்றி தயங்கோர்பாக

மடவரன்மெல் லியல் போற்றி மன்னு மிளஞ்சேய்போற்றி மலர்க்கண் போற்றி

திடவுலக மேத்துகதிர் வாள்போற்றி நிறைசெல்வத்- தியாகராஜ

நடவுதிருத் தேர்போற்றி நம்மையாட்கொளுமஜபா- நடனம் போற்றி

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீகமலாலய க்ஷேத்திரதத்துவம்

முற்றிற்று.

---

ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சகம், காஞ்சிபுரம். 2—51.

# ஸ்ரீ கமலாலய க்ஷேத்திர தத்துவ

# அநுபந்தம்

ஸ்ரீமான் முத்துசாமி தீக்ஷிதர் அவர்களால் இயற்றியருளப்பட்ட **"தியாகராஜயோக வைபவம்"** என்னும் கீர்த்தனத்தின் விமர்சம்.

**ராகம்** ஆனந்தபைரவி **பல்லவி** **தாளம்** ரூபகம்

தியாகராஜயோக வைபவம் — ஸதாசிவம்
ஸதாச்ரயாமி — தியாகராஜயோக வைபவம்
அகராஜயோக வைபவம் — ராஜயோகவைபவம்
யோகவைபவம் — வைபவம் — பவம் — வம் (தியாக)

**சரணம்**

நாகராஜ விநுதபதம் — நாதபிந்து களாஸ்பதம்
யோகராஜ விதிதபதம் — யுகபத்போக மோக்ஷப்ரதம்
யோகரூடி நாமரூப விச்வ ஸ்ருஷ்ட்யாதி கரணம்
யுகபரிவ்ருத்யப்த மாஸ தின கடிகா த்யாவரணம்

**மத்யமகாலம்**

ஸ்ரீ குருகுஹ குரும் — ஸச்சிதாநந்த பைரவேசம்
சிவசக்தியாதி ஸகல — தத்வ ஸ்வரூபப்ரகாசம்
சம் — ப்ரகாசம் — ஸ்வரூபப்ரகாசம்
தத்துவ ஸ்வரூபப்ரகாசம் — ஸகலதத்துவ
ஸ்வரூபப்ரகாசம் — சிவசக்தியாதி ஸகல
தத்துவ ஸ்வரூபப்ரகாசம் (தியாகராஜ)

தியாக ராஜயோக வைபவம் — ஸதாசிவம்
ஸதாச்ரயாமி — தியாகராஜ யோகவைபவம்
அகராஜயோக வைபவம் — ராஜயோகவைபவம்
யோகவைபவம் — வைபவம் — பவம் — வம் (தியாகராஜ)

(தாத்பர்யம்) ஸதாசிவ ஸ்வரூபமாயும் அறம், பொருள், இன்பம் என்னும் திரிவர்க்கங்களையும் தியாகம் செய்தபின்னர் ஏற்பட்ட ஞான யோகமாகும் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய அகண்ட ஏகரஸஸ்வரூபமாயும், உள்ள ஸ்ரீ தியாகராஜஸ்வரூபத்தில் இரண்டறக்கலத்தலாகும் யோகத்தின் மஹாபலமாகிய வைபவத்தை நான்எப்போதும் ஆச்ரயிக்கிறேன்.

மேலும் அத்தியாகராஜஸ்வரூபம் எங்ஙனம் விளங்குகின்றதெனின்,

**அகராஜயோக வைபவம்** - பர்வதராஜனும் ஹிமவானுடைய தவத்தின் முதிர்ச்சியாகும் தியான யோகத்தின் பயனும் சிவசக்தி ஐக்கிய ஸ்வரூபமாயும்,

**ராஜயோக வைபவம்** - அசுத்தமனத்தின் பாஹ்யவ்ருத்திகளை நிக்கிரஹம் செய்வதன் மூலமாய்ச் சுத்தம்செய்யப்பட்டதூயமனத்தை அந்தர்முகமாகச்செய்யின், சிவாபின்ன பிரத்தியக் ஆத்மா உணராமல் உணரப்படும். இந்த சிவாபின்ன ஆத்ம ஸாக்ஷாத்காரந்தான் ராஜ யோகத்தின் வைபவம். இத்தகைய ராஜயோகத்தின் வைபவமாயும்,

**யோக வைபவம்** - கர்மயோகம், பக்தியோகம், மந்த்ரயோகம், லயயோகம், ஹடயோகமென்னும் பற்பலயோகங்களின் வைபவமாயும்

**வைபவம்** - ஸமாதியோகத்தில் ஏற்படும் விசேஷ சைதன்ய ஸாக்ஷாத்கார ரூபமாயும்,

**பவம்** - பரமேச்வர ரூபமாயும்,

**வம்** - அம்ருதஸ்வரூப நித்தியானந்த கனமாயும் விளங்குகின்றது ; மேலும்,

நாகராஜ விநுதபதம் — நாதபிந்துகலாஸ்பதம்
யோகிராஜ விதிதபதம் — யுகபத்போக மோக்ஷப்ரதம்
யோகரூடி நாமரூப — விச்வஸ்ருஷ்டியாதிகரணம்
யுகபரிவ்ருத்யப்தமாஸ — தினகடிகாத்யாவரணம்.

**நாகராஜ விநுதபதம்** - ஸர்ப்பராஜாவாகும் ஆதிசேஷனுல் போற்றப்பட்ட பாதாரவிந்தங்களை யுடையவரும், (ஆடரவக் கிண்கிணிக்காலழகர் தியாகேசன்)

**நாதபிந்துகலாஸ்பதம்** - நாதம், பிந்து, கலை, முதலிய பிரிவுகளை யுடைய சப்தத்திற்கு ஆஸ்பத மானவரும்,

**யோகிராஜ விதிதபதம்** யத்ரயோகீச்வர: க்ருஷ்ண: என்னும் பிரமாணத்தின்படி யோகிகட்கு ராஜன் ஸ்ரீ மஹாவிஷ்ணுவாவர். அவரால் அறிந்து அடையப்பட்ட ஸ்வபாவ நிலையாய் விளங்குபவரும்,

**யுகபத்போக மோக்ஷப்ரதம்** - ஸமகாலத்தில் போகத்தையும், மோக்ஷத்தையும் அருளிச்செய்பவரும்.

**யோகரூடி நாமரூப விச்வஸ்ருஷ்டியாதிகரணம்** - யோகம் (காரணம்) ரூடி (இடுகுறி) யோகரூடி (காரண இடுகுறி) இவற்ருல் பொருள் செய்யப்படும் பற்பல நாமங்களோடும் ரூப(உருவ)ங் களோடும் கூடிய இந்தபிரபஞ்சத்தின் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அநுக்கிரஹம் என்னும் பஞ்சகிருத்தியங்களுக்கும் இன்றியமையாத காரண ஸ்வரூபமானவரும்,

**யுகபரிவ்ருத்யப்தமாஸ தினகடிகாத்யாவரணம்** - யுகம், பரிவ்ருத்தி, வருஷம், மாசம் தினம், நாழிகை, திதி முதலிய அங்கங் களோடு கூடிய கால ஸ்வரூபத்திற்கு அதிஷ்டானமானவரும், ஆகிய ஸ்ரீ தியாகராஜஸ்வரூபரை ஸதா ஆச்ரயிக்கிறேன்.

மற்றும் அந்தஸ்வரூபம் எங்ஙனம் விளங்குகின்றதெனின்,

**ஸ்ரீ குரு குஹ குரும்** - அடியேனது ஸத்குரு நாதராகிய ஸ்ரீ குஹாநந்த நாதருக்குக்குரு(பிதா) வானவரும்,

**ஸச்சிதாநந்த பைரவேசம்** - பீஷணாத், ரக்ஷணாத், வமனாத், பைரவ: என்னும் பிரமாணத்தின்படி ருத்திரன், மஹாவிஷ்ணு, நான்முகன் முதலியகாரியப்பிரஹ்மங்களுக்கும் ஈசனாகியஸச்சிதாநந்த ஸ்வரூபரும்,

**சிவசக்தியாதி ஸகல தத்வ ஸ்வரூபப்ரகாசம்** - தனது ஸ்வரூபமாகிய மஹாப்பிரகாசத்தினால் சிவம், சக்தி, முதலிய எல்லாத்தத்துவங்களையும் பிரகாசிக்கச் செய்பவரும்,

**சம்** - அழிவற்ற ஆனந்தஸ்வரூபரும்,

**ப்ரகாசம்** - சைதன்யஸ்வரூபரும்,

**ஸ்வரூபப்ரகாசம்** - ஆத்மாபின்னசிவஸ்வரூப சிதாநந்தவடிவினரும்,

**தத்வஸ்வரூபப்ரகாசம்** - மஹா வாக்கியத்திலுள்ள தத் - துவம் என்னும் பதங்களின் வாச்சியார்த்தமாகிய ஈசஜீவர்களின் லக்ஷ்யார்த்த வடிவ அகண்ட ஐக்கிய மஹாப்பிரகாசராயும்,

**ஸகலதத்துவ ஸ்வரூபப்ரகாசம்**-ஆத்மதத்துவம்,வித்யாதத்வம், சிவதத்வம் என்னும் சகலதத்வங்களுக்கு அதிஷ்டானமானவரும்,

**சிவசக்தியாதி சகலதத்துவஸ்வரூபப்ரகாசம்** - சிவம், சக்தி ஸதாசிவ, ஈச்வர, சுத்தவித்தை முதலிய முப்பத்தாறு தத்வங்களையும் அதிஷ்டித்துக்கொண்டு அவற்றிற்குச் சத்தையையும் விளக்கத்தையும், தந்து விளங்கிக்கொண்டுள்ளவரும் ஆன ஸ்ரீ தியாகராஜரை நான் எப்பொழுதும் ஆச்ரயிக்கிறேன்.



ஸ்ரீ

# குஹாநந்தமண்டலி

## ஆசிரியர் ந. சுப்பிரமணிய அய்யர் அவர்களால் இயற்றப்பட்ட நூல்கள்

---

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஸ்ரீ வித்யா ஸபர்யாபத்ததி (நாகரி) | ... | 3 | 8 | 0 |
| 2. | ஸ்ரீ வித்யா நித்யான்ஹிகம் (நாகரி) | ... | 3 | 0 | 0 |
| 3. | குருதத்வ விமர்சம் (தமிழ்) | ... | 0 | 6 | 0 |
| 4. | ஸ்ரீ நகரவிமர்சம் (நாகரி-தமிழ்) | ... | 2 | 0 | 0 |
| 5. | வரிவஸ்யா ரஹஸ்யம் (நாகரி-தமிழ்) | ... | 1 | 8 | 0 |
| 6. | ஸ்ரீ வித்யா ஸபர்யா வாஸனை (தமிழ்) | ... | 3 | 0 | 0 |
| 7. | லலிதோபாக்யான விமர்சம் (தமிழ்) | ... | 0 | 6 | 0 |
| 8. | ஸுப்ரஹ்மண்ய தத்துவம் (தமிழ்) | ... | 1 | 8 | 0 |
| 9. | மநீஷாபஞ்சகம் (நாகரி-தமிழ்) | ... | 0 | 10 | 0 |
| 10. | காமகலா விலாஸம் (நாகரி-தமிழ்) | ... | 1 | 8 | 0 |
| 11. | சக்தி மஹிம்நஸ்தோத்திரம் (நாகரி-தமிழ்) | ... | 0 | 12 | 0 |
| 12. | லலிதாத்ரிசதீ பாஷ்யம் (தமிழ்) | ... | 3 | 0 | 0 |
| 13. | அஜபாகல்பம் | ... | 0 | 12 | 0 |
| 14. | ஸ்ரீ வித்யாகீதை (நாகரி-தமிழ்) | ... | 1 | 4 | 0 |
| 15. | ஸ்ரீ வித்யாஸபர்யா வாஸனை (ஆங்கிலம்) | ... | 3 | 0 | 0 |
| 16. | பஞ்சநத க்ஷேத்திர தத்துவம் | ... | 0 | 8 | 0 |

பரங்கிமலை P. O.
Madras 16.

குஹாநந்தமண்டலி
பழவந்தாங்கல்.